இக் கைகள் எவ்வளவு சாமர்த்திய
மாக வேலை செய்கின்றன. ஆனால்...



...சாமர்த்தியமுள்ள கைகள் கூட
அழுக்கடைகின்றன!

அழுக்கடைந்த கைகள்
**மறைந்திருக்கும்**
**அபாயத்தைத்**
தாங்குகின்றன!



அழுக்கில் கண்களுக்கு
புலப்படாத கிருமிகள் இருப்பதால்!

லைப்பாயினால் அடிக்கடி கழுவுங்கள்

# லைப்பாய் சோப்

அழுக்கிலிருக்கும் கிருமிகளிலிருந்து
உங்களை காப்பாற்றுகிறது!

L. 179-50 TM

கினிபாரக்

மகிழ்ச்சியுடன் அறிவிக்கும்

வஸுமித்ராவின்

உணர்ச்சி சித்திரம்

# பைரவ மந்த்ரம்

தமிழ்

பாட்டு: பாபநாசம் சிவன்

கினிபாரக் 3/2, மதன் தெரு, கல்கத்தா - 13.

# கரப்பைக் கொல்லுங்கள்

## —அது உங்கள் உணவை அசுத்த மாக்கி, வியாதியைப் பரப்புகிறது



கரப்பு ஒரு தடவைக்கு 16 முட்டைகள் இடுகின்றது. முட்டை கிளம்பியிலிருந்து பூரண வளர்ச்சி பெற சுமார் ஒரு வருஷமாகும். அதற்கிடையில் அதன் சருமம் ஆறு தடவை உரித்துவிழுகிறது.

கரப்பு பகலெல்லாம் ஒளிந்திருந்து இரவில் வெளி வருகிறது. உங்கள் உணவு, துணிகள், காகிதம், புத்தகங்கள் மற்றும் கண்ணில் கண்ட சாமான்களையெல்லாம் கடித்து அசுத்தமாக்குகிறது. சாக்கடைகள், கக்கூஸ்கள் முதலிய அசுத்தமான இடங்களில் வாழும் இந்த ஜந்து வயிற்றுப்போக்கு, வயிற்றுக் கடுப்பு மற்றும் அநேக ரோகங்களைப் பரப்புகிறது.

ஞாபகமிருக்கட்டும்: ப்ளிட்டிலடங்கிய 5 கொடிய கீடநாசினிகள் கரப்புகளையும் மற்ற எல்லாப் பூச்சிகளையும் துரிதமாயும் நிச்சயமாயும் கொல்லுகின்றன.

கரப்பு உங்கள் உணவை அசுத்தமாக்குமுன் அதைக் கொல்லுங்கள்.




ஸ்டாண்டர்ட்-வாக்குவம் ஆயில் கம்பெனி

(கம்பெனி அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது)

# பயர்ஸ்டோன் டயரின் உற்பத்தி






## உயர்ந்த ரகமான மூலப் பொருள்கள்

பயர்ஸ்டோன் டயர்கள் இணையில்லாது விளங்குவதற்கு மூலகாரணம் அதன் தயாரிப்பில் உபயோகப் படுத்தப்படும் மிகச் சிறந்த ரகமான மூலப் பொருள்களே. இந்த நம்பகமான டயர்களில் ஒரே தரமான பஞ்சு, ரப்பர் இதரப் பொருள்கள் யாவும் உற்பத்திக்கு முன் பல பரிசோதனைகளுக்குப் பிறகுதான் உபயோகிக்கப் படுகின்றன. தயாரிப்பில் தரத்தில் உயர்ந்ததே ஏற்றுக் கொள்ளப் படுகிறது. அவரவர்கள் இஷ்டத்திற்கு ஏற்ற வாறு தேர்ந்தெடுக்க இருப்பினும் லக்ஷக் கணக்கான மோட்டார் சொந்தக்காரர்களும் போக்குவரத்து நிர்வாகிகளும் பயர்ஸ்டோன் டயர்களையே வற்புறுத்தி வாங்குகின்றனர்.



அதிக மைல்கள், சுகம், நாகரீகப் பாங்கு, பணத்திற்குறிய மதிப்பு ஆகிய பயன்களை பயர்ஸ்டோன் டயர்கள் வாங்கும்போது நீங்கள் அடைகிறீர்கள்.

**Firestone**

"கம் டிப்பிடு டயர் இது ஒன்றே"

# இசையின் இன்ப உயர்வுக்கு!

G.E.C. ரேடியோ

உயர்ந்த வேலைப்பாடுடன் தயாரிக்கப்பட்டது

ஒவ்வொரு ரேடியோவும் 12 மாத உத்தரவாதம் பெற்றவை

B.C. 5052W A.C.
B.C. 5057W AC./DC.
அழகிய மரப்பெட்டிகளில் Rs. 495/-

மற்றும் பல மாடல்கள் உள்ளன





வயர்லெஸ் ஸேல்ஸ் & சர்வீஸ் கம்பெனி,

141 A. மவுண்ட் ரோட், சென்னை-2.

தந்தி: RADSALES

கிளை: சேரி ரோட், சேலம்



## பாக்கெட் ரப்பர் பிரஸ்





எல்லா ஆங்கில எழுத்துக்களும் கொண்ட சிறிய அச்சடிக்கும் இயந்திரம் இது. ஒன்றை வாங்கி ஐந்தே நிமிஷங்களில் உங்களது லெட்டர் பாடுகள், பில்கள், பெயர்கள் இவைகளை அச்சடித்துக்கொள்ளுங்கள். மிகவும் ஆச்சரியகரமான நவீனம். அச்சடிக்கும் பாடு, இங்க், விவரங்களடங்கிய குறிப்புகள் சகலமும் உள்பட ஒன்றின் விலை ரூ. 6/- வி. பி. பி. சார்ஜ் ரூ. 1-4 தனி.

## “பாஷைகளின் ஆசான்”

### 48 மணி நேரத்தில் 14 பாஷைகள்

14 பாஷைகளின் ஆசான் என்னும் எங்கள் புத்தகம் ஒன்றின் உதவியால் ஹிந்தி, ஆங்கிலம் குஜராத்தி, பர்மிய பாஷை, சீன பாஷை, தமிழ் முதலிய பாஷைகளை 48 மணி நேரத்தில் எழுதவும், படிக்கவும், பேசவும் கற்றுக் கொள்ளுங்கள். வி. பி. பி. யில் அனுப்ப இன்றே எழுதுங்கள். ஒன்றின் விலை: ரூ. 5. தபால் செலவு அணா 12 தனி.





தற்போது கிடைக்கிறது
அமெரிக்கன் மாடல்
ரோல் பிலிம்
பாக்ஸ்

## காமிரா

திருஷ்டி உபகரணத்துடன் உயர்ந்த லென்ஸுகள் பொருத்தப்பட்ட, விலையில் மலிவான மேன்மையான காமிரா, புதிதாகக் கற்றுக் கொள்பவர்களும் எளிதாக உபயோகிக்கலாம். பிலிம் நெ. 120-ல் நீண்ட காலம் திருப்தி அளிக்கும். 2¼" × 3¼" சைஸ் போட்டோக்கள் எடுக்கலாம். திருப்திக்கு உத்திரவாதம். முழு விவரங்களடங்கிய குறிப்புகளுடன் விலை ரூ. 11-8-0 பாக்கிங் தபால் செலவு ரூ. 1-8-0 தனி. தோல் கேஸ் ரூ. 3/- சரக்குகள் சொல்பமே உள்ளதால் உடனேயே தேவைக்கு எழுதவும்.

கடிதங்கள் ஆங்கிலத்திலேயே எழுதப்படல் வேண்டும்

BENGAL TRADERS, (118K) KANWARIGANJ, ALIGARH. U.P.(INDIA)

## அமெரிக்கன் பாக்ஸ் காமிரா



லிங்க்-டி-லக்ஸ் (யு.எஸ்.ஏ.) காமிரா உபயோகித்தால் 16 எக்ஸ்போஷர் கொண்ட செ. 127 ரோல் பிலிம் புதிதாக போட்டோ எடுக்க ஆரம்பிப்பவர்கள் கூட சுலபமாகச் சிறந்த போட்டோ எடுத்து தினசரி ரூ. 5 சம்பாதிக்கலாம். ஒரு ரோல் பிலிமுடன் எளிய முறையில் விவரங்களும் இலவசம், விலை செ. 1: ரூ. 18; செ. 2: ரூ. 20; டீலக்ஸ் ரூ. 23; மிக உயர்ந்தது ரூ. 26. பாக்கிங், தபால்செலவு ரூ. 1-8-0



நெ. 86 வட்டமான கேஸ் 15 வருஷ உத்தரவாதம். க்ரோமியம் கேஸ், ரவுண்டு ஷேப். 7 ஜூ. ரூ. 16. செண்டர் செக. ரூ. 18. ரேடியம் டயல் ரூ. 21. ரோ. கோ. ரூ. 20. 15 ஜூ. தட்டை ஷேப் ரூ. 25. பாக்கெட் கடிகாரம் ரூ. 12. டைம்பீஸ் ரூ. 16. ஸிட்டர் ரூ. 18.



நெ. 87. நீண்ட சதுரம் க்ரோ. 8 ஜூ. ரூ. 22. ரோ. கோ. ரூ. 24. 17 ஜூ. க்ரோ. ரூ. 30. ரோ.கோ. ரூ. 35.



நெ. 88. நீண்டசதுரம் டன்னோ வளைவு க்ரோ. கேஸ் 9 ஜூ. ரூ. 26. ரோ. கோ. ரூ. 28. சிறந்தது ரூ. 30. 17 ஜூ. க்ரோ. ரூ. 36. 17 ஜூ. ரோ.கோ. ரூ. 40. பாக்கிங், தபால் செலவு ரூ. 1/4/-

பாக்கெட் பிரஸ். பெயர், விலாசம், கடிதம், லேபிள், நீலச் சீட்டு குறிப்பு ஆகியவைகளை வீட்டிலேயே அச்சடிக்கலாம்.



நெ. 8: ரூ. 1/8/- நெ. 9: ரூ. 2; டீலக்ஸ் ரூ. 2/8/- சிறந்தது ரூ. 3; பெரிய அளவு உயர் ரகம் ரூ. 6. தபால் செலவு ரூ. 1-4-0

GREAT NATIONAL STORES (K - 1)
POST BOX NO. 12216, CALCUTTA-5



## "ஸ்ரீ மகாலக்ஷ்மி ரக்ஷை"



1 மண்டலம் (48 நாள்)
பூஜை செய்தும்
ஆயுள் பூராவும்
பலன் தரும்
வெள்ளி ரக்ஷை
ரூ. 43—12—0

ஸ்ரீ மகாலக்ஷ்மி ரக்ஷை வேண்டுபவர்கள், தங்கள் நியாயமான கோரிக்கைகளை எழுதி ரூ. 5-12-0 மணியார்டர் செய்யவும். மீதி தொகை, வெள்ளி, விளம்பரம், தபால் செலவிற்குமாக தேவை. மீதி ரூ. 38/-ம் ரக்ஷை அணிந்த 108 நாளைக்குள் பலன் அடைந்து அனுப்பி வைக்கவும்.

N. B. *(1)* ஆர்டர் கிடைத்த 9-ம் நாள் ரக்ஷை பிரஸாதத்துடன் அனுப்பப்படும். *(2)* வெளி நாட்டு நேயர்கள் இரட்டிப்புத் தொகை பிரிட்டிஷ் போஸ்டல் ஆர்டர் மூலம் அனுப்பவும். *(3)* V. P. கிடையாது. *(4)* அதர்மர்களும் நாஸ்திகர்களும் தடுக்கப்படுகிறார்கள்.

**கோட்டமருதூர்**
**ஸ்ரீ மஹாலக்ஷ்மி ஜ்யோதிஷ ஆபீஸ்**
அரகண்டநல்லூர் P. O. (S. A. Dt.)



# B. I. S. N. கம்பெனி லிமிடெட்

**சென்னை - நாகப்பட்டினம் - பினாங்கு - சிங்கப்பூர்**

# S. S. "ரஜூலா"

சென்னை புறப்படும் தேதி — 1951 செப்டம்பர் 15உ
நாகப்பட்டினம் புறப்படும் தேதி — 1951 செப்டம்பர் 16உ

கப்பல் புறப்படும் தேதி காலை 6 மணிக்குமேல் சாமான்கள் ஏற்றப்படமாட்டா.

கப்பலேறுவதற்கான ஏற்பாடுகள் :

சென்னையிலிருந்து 15-9-51 : *பெர்த் வசதியற்ற பிரயாணிகள் காலை 10 மணிக்கு ஸலூன் பிரயாணிகள் வைத்ய பரிசோதனைக்கும், கப்பலில் ஏறுவதற்கும் பகல் 12 மணி முதல் பகல் 1 மணிக்கு மேற்படாமல் வந்துவிட வேண்டும்.*

நாகப்பட்டினத்திலிருந்து 16-9-51 : *பெர்த் வசதியற்ற டிக்கெட்டுள்ளோர் காலை 6 மணிக்கும் ஸலூன் டிக்கெட் உள்ளவர்கள் 8 மணிக்கும் கப்பலேறலாம்.*

*சென்னையில் ஏறும் பிரயாணிகள் 15-9-51 பகல் 1 மணிக்கு மேல் வந்தால் வைத்ய பரிசோதனைக்கு தாமதமாகிவிடும். ஆகையால் அவர்கள் கப்பலேற முடியாது.*

*பினாங்கு, சிங்கப்பூர் துறைமுக சுகாதார விதிகளை அனுசரிக்க வேண்டி விருப்பதால் எல்லா பிரயாணிகளும் சர்வதேச சுகாதார விதிகளின்படி அமைந்த பாரத்தில் அம்மை குத்தியதற்கான சர்ட்டிபிகேட்டும், காலரா எதிர்ப்பு இஞ்சக்ஷன் செய்ததற்கான சர்ட்டிபிகேட்டும் பெற்று, ஒரு சர்க்கார் அல்லது முனிஸிபல் ஹெல்த் ஆபீஸரின் அத்தாட்சியுடன் செல்லுபடியாகக் கூடிய நிலையில் கொண்டுவர வேண்டும்.*

| | |
|---|---|
| பின்னி & கோ., (மதராஸ்) லிமிடெட் | மதுரா கம்பெனி லிமிடெட் |
| 7, அரமனைக்காரத் தெரு, மதராஸ் | முதல் லைன் பீச்ரோடு, நாகப்பட்டினம் |

# நீங்கள் இன்று உங்கள் பற்களை மக்ளீன் செய்தீர்களா?



அவள் செய்து தானிருக்கிறாள். அவளது பிரகாசமான புன்னகையைப் பாருங்கள்! பளபளப்பும், ஆரோக்கியமும் மிளிரும் பற்களை பாருங்கள். மக்ளீன் பெராக்ஸைட் பற்பசையால் தினமும் இரண்டுதரம் அவள் சுத்தம் செய்து கொள்ளுகிறாள்.

மக்ளீன் பெராக்ஸைட் பற்பசை உங்கள் ஈறுகளை ஆரோக்கியமாகவும், பற்களை வெண்மையாகவும், ஒரே சமயத்தில் விளங்கும்படி செய்கிறது. அதனால்தான் உலகிலுள்ள லக்ஷக்கணக்கான புத்திசாலித்தாய்மார்கள் தங்கள் குழந்தைகளுக்கு தினமும் இரண்டு தடவை மக்ளீன் பற்பசையினால் பற்களை சுத்தம் செய்யும்படி கூறுகின்றனர்.

"நான் எப்பொழுதும் மக்ளீன்ஸ் உபயோகிக்கிறேன். ஏனெனில் அது என் பற்களை வெண்மையாகவும் பளபளப்பாகவும் இருக்கச் செய்கிறதென்று என் தாய் சொல்கிறாள்"

**இன்றே மக்ளீன்ஸ் வாங்குக!**




MTY-1 TAM.

வியாபார விவரங்களுக்கு: ஜே. எல். மாரிசன், ஸன் அண்ட் ஜோன்ஸ் (இந்தியா) லிமிடெட், மஹாலக்ஷ்மி கோவிலுக்கு எதிரில், வார்டன் ரோட், பம்பாய் 26.

## மீண்டும் பாதி விலைக்கு குறைவான சலுகை!

### 15 நாட்களுக்கு மட்டும்

**புகழ் வாய்ந்த ஸ்விஸ் பாக்டரியில் தயாரித்த கைக் கெடிகாரங்கள்.**

ஒவ்வொன்றும் ஐந்து வருட உத்திரவாதம் கொண்டவை.



| | ஒரிஜினல் விலை | தற்போது விலை |
|---|---|---|
| ஜெர்மன் பாக்கெட் வாட்ச் | 24/- | 11/- |
| „ உயர் ரகம் | 28/- | 13/- |
| இங்கிலீஷ் அலாரம் டைம்பீஸ் | 40/- | 19/- |

No. 525  Size 6¾'''

| | | |
|---|---|---|
| 15 ஜுவல் ரோல்டு கோல்டு | 96/- | 45/- |
| 15 ஜுவல் 20 மைக்ரோன்ஸ் | 100/- | 48/- |

No. 526  Size 10½'''

| | | |
|---|---|---|
| 15 ஜுவல் ரோல்டு கோல்டு | 98/- | 48/- |
| 15 ஜுவல் 20 மைக்ரோன்ஸ் | 110/- | 52/- |

No. 527  Size 5¼'''

பிராந் ஷேப்

| | | |
|---|---|---|
| 5 ஜுவல் க்ரோம் கேஸ் | 45/- | 22/- |
| 5 ஜுவல் ரோல்டு கோல்டு | 52/- | 25/- |

இரண்டு கடிகாரங்கள் ஆர்டர் செய்பவர்களுக்கு தபால் செலவு இலவசம்.

**PIONEER WATCH Co**
POST BOX NO 11428 CALCUTTA

---

மதராஸ்

## பெரம்பூர் சங்கீத சபா

( Estd. 1931 )

சிறந்த சங்கீதக் கச்சேரி



**16-9-51 ஞாயிற்றுக்கிழமை மாலை 5-30 மணி**

**சிதம்பரம் ஸ்ரீ C. S. செல்வரத்தினம் பிள்ளை**
**விருதுநகர் ஸ்ரீ N. காசிராஜன்** — பாட்டு

ஸ்ரீ N. ராமமூர்த்தி — பிடில்
ஸ்ரீ C. T. லட்சுமணன் — மிருதங்கம்
ஸ்ரீ K. U. கிருஷ்ணமணி — கஞ்சிரா

இடம் :

**R. B. C. C. C. High School, Perambur**

---



அமெரிக்கன்

## சிறிய ஸ்பிரிட் ஸ்டவ்

தேனீர், சிற்றுண்டி, வென்னீர், முதலியன தயாரிப்பதற்கு இப் புதிய ரக ஸ்பிரிட் ஸ்டவ்வை வாங்குங்கள். ஓர் சிறிய அளவு ஸ்பிரிட் உங்களது தேவையைப் பூர்த்திசெய்யும். விலை ஒன்று ரூ. 4-8-0 தபால் செலவு ரூ. 1-8-0 தனி.

ஸ்டாக்குகள் விற்பனையாகி வருகின்றது

இன்றே வி. பி. பி. மூலம் ஒன்று ஆர்டர் செய்யுங்கள்

○●○

### வீட்டில் சினிமா

இந்தச் சின்ன யந்திரம் மூலமாக, வீட்டில் பலவித கலர் சித்திரங்களைப் பார்த்து, பெரிய சினிமாவின் மூலம் கிடைக்கும் ஆனந்தத்தை அடையலாம். சினிமா சித்திரங்களுடன் விலை ரூ. 5-0-0 தபால் செலவு 1-8-0 தனி. கடிதப் போக்கு வரத்து ஆங்கிலத்தில் வைத்துக் கொள்ளவும்.

விவரங்களுக்கு :

**MILAP TRADING CO., (KL)**
KANWARIGANJ, ALIGARH, U.P. (India)



# Vatni வத்னி'

## நம் வட்டனுல் (ஸ்வதேசம்) விரும்பப்படும் சோப்

புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட ஓர் அலாதி முறையின் நன்மை பயக்கும் அம்சங்கள் புகுத்தப்பட்டதும், பொறுக்கி எடுக்கப்பட்ட சோதனைக்குள்ளான பொருள்களால் இந்தியாவிலேயே, இந்தியர்களுக்காக இந்தியர்களால் தயாரிக்கப்பட்ட கோத்ரெஜ் வத்னி டாயலெட் சோப்புகள் இவ்வரிய குணங்களை உடையன:—

**1** முற்றிலும் சிக்கனமுள்ளது. கெட்டியாயிருந்த போதிலும் மிருதுவானது. உபயோகிக்கும் பொழுது உடையாது, வீணாகாது. அதன் கடைசி செதில் உள்ளளவும் பரிமளங்கமழும் க்ரீம் நுரையை அளிக்கிறது.

**2** அது அதிக மிருதுத் தன்மையை உடையது—குழந்தையின் இளஞ் சருமத்திற்கு ரொம்பவும் நல்லது.

**3** சுத்தம் செய்வதில் முதன்மையானது.

**4** அதிசயிக்கத் தக்க குறைந்த விலையில் விற்கிறது.

## ஒப்புயர்வற்ற சுதேசி ஸோப்

முற்றிலும் சுத்தமானது.
மிருகக் கொழுப்பற்றதென்பதற்கு உத்தரவாதம்.
விருந்தினருக்கான சிறு கட்டியாயும் கிடைக்கும்

**Godrej கோத்ரெஜ்** சோப்ஸ், லிட்.
ரிஜிஸ்டர்டு
மதராஸ்: 164, பிராட்வே; ... 6/36. ...

தாவர எண்ணைகளினுல் ஸோப்பு தயாரிப்பதில் முதன்மையானவர்கள்

# பொருள் அடக்கம்

கல்கி

மலர் 11 இதழ் 6 | 1951 செப்டம்பர் 9 | கர ஷு ஆவணி 24உ



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே! சம்பவங்களும் கற்பனையே.





சென்னையில் எல்லா டி. யு. வி. எஸ். பிராஞ்சுகளிலும் கிடைக்கும்

# Fordson

## *Major* TRACTOR

ஒரு காலன் பெட்ரோலுக்கு
அதிக உழைப்பு
அளிக்கும்
டிராக்டர் இதுவே!

ஒவ்வொரு வேலைக்கும்
அதிக சக்தி

ஒவ்வொரு வருஷத்திலும்
அதிக பணம் சேமிப்பு

ஒரு தினத்திற்கு
அதிக ஏகராக்கள் சாகுபடி

ஒரு காலன் எண்ணெய்க்கு
அதிக உழைப்பு



## போர்ட்ஸன்

### மேஜர் டிராக்டர்

போர்ட்ஸனில் ஏற்றி அமைக்கப்பட்டிருக்கும்
கருவிகள் ஹைடராலிக் பவரில் இயங்குகின்றன.

THE SYMBOL OF SERVICE

போர்டு மோட்டார் கம்பெனி ஆப் இந்தியா லிமிடெட்
பம்பாய்.

•

*விற்பனையாளர்கள் :*

**ஸிம்ஸன் & கம்பெனி லிமிடெட்**
202/203, மவுண்ட் ரோடு :: மதராஸ்-2
*கிளைகள் :* பெங்களூர். செகந்தராபாத் (தக்காணம்)
உதகமண்டலம் திருச்சிராப்பள்ளி

கல்கி

மலர் 11

தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

இதழ் 6

# தள்ளி வைத்தது நல்லது!

சர்க்கார் இலாகாக்களில் சிற்சில உத்தியோகங்களைப் பூர்த்தி செய்வதற்காகச் சில சமயம் விளம்பரம் போடுவார்கள்.

சொல்லக் கூடாத வருஷத்தில் சொல்ல முடியாத தேதியில் அரசாங்க இலாகாவில் குறிப்பிட்ட உத்தியோகத்துக்கு விளம்பரம் வெளியாயிற்று. மனுச் செய்து கொள்ளுகிறவர்கள் 25 வயதுக்கு மேல் 30 வயதுக்குட்பட்டிருக்க வேண்டுமென்றும், பி. எஸ். ஸி. பரீட்சை தேறியிருக்க வேண்டுமென்றும், ஐந்து அடி எட்டு அங்குல உயரத்திற்குக் குறையாமலிருக்க வேண்டுமென்றும்,—இப்படிச் சில நிபந்தனைகள் வெளியாகி யிருந்தன.

வந்த மனுக்களிலே ஒரே ஒரு மனுதார்தான் மேற்படி நிபந்தனைகளைப் பூர்த்தி செய்தார். ஆகையால் அவருக்கு அந்த உத்தியோகம் ஆயிற்று.

மூன்று மாதத்துக்கெல்லாம் அவருக்குப் 'பிரமோஷன்' ஆகி மேலே போய்விட்டார். மறுபடியும் அதே உத்தியோகத்து விளம்பரம் வந்தது. இம்முறை 23 முதல் 25 க்குள் வயது இருக்க வேண்டுமென்றும், பி. ஏ. ஆனர்ஸ் படித்திருக்க வேண்டுமென்றும், அத்துடன் டைப் ரைட்டிங் தெரிந்திருக்க வேண்டும் என்றும், ஐந்து அடி மூன்று அங்குலத்துக்கு மேல் உயரமாயிருக்கக் கூடாதென்றும் நிபந்தனைகள் விதிக்கப்பட்டன.

இந்த நிபந்தனைகளை ஒரே ஒரு மனுதார்தான் பூர்த்தி செய்தார். அவருக்கு உத்தியோகம் ஆயிற்று.

மறுபடியும் நாலு மாதத்திற்குப் பிறகு அதே உத்தியோகத்துக்கு வந்த விளம்பரத்தில் விவசாயக் கலாசாலை 'கிராஜுவேட்'டா யிருக்க வேண்டுமென்றும், மலையாள பாஷை தெரிந்திருக்க வேண்டுமென்றும், இதுபோன்ற வேறு சில நிபந்தனைகளும் இருந்தன. அந்த நிபந்தனைகளையும் பூர்த்தி செய்ய ஒரே ஒரு ஆசாமி கிடைக்கத்தான் செய்தார்.

விஷயம் என்னவென்றால், ஒரு உத்தியோகத்தை இன்னாருக்குக் கொடுப்பது என்று முதலில் தீர்மானம் செய்து கொள்வார்கள். அவருக்குத் தவிர வேறு யாருக்கும் கிடைக்க முடியாத விதத்தில் நிபந்தனைகளைப் போட்டுச் சம்பிரதாய சட்டத்தின் கண்ணைத் துடைப்பதற்கு விளம்பரம் செய்வார்கள்.

இப்படி ஒரு காலத்தில் நடந்தது! எப்போது, எங்கே—என்றெல்லாம் கேளாதீர்கள். கேட்டால் சொல்ல முடியாது.

பொதுத் தேர்தலுக்குக் காங்கிரஸ் சார்பாக நிற்க விரும்பும் அபேட்சகர்கள் விண்ணப்பம் போடலாம் என்ற விளம்பரமும் இந்த ரகத்தைச் சேர்ந்ததாயிருக்கலாம் என்ற சந்தேகம் நாட்டில் பலருக்கு இருக்கிறது. "இந்தந்தத் தொகுதிக்கு இன்னின்னார் என்பதை ஏற்கனவே முடிவு செய்து விட்டார்கள். விண்ணப்பம் போடச் சொல்வதெல்லாம் கண்ணைத் துடைக்கும் காரியம்" என்று ஒரு நேயர் எழுதியிருக்கிறார்.

இப்படியெல்லாம் சந்தேகப்பட்டுக் கொண்டு தேசமக்களுக்குக் கிடைத்திருக்கும் ஜனநாயக உரிமையை இழந்து விடுவது நியாயமும் அல்ல, புத்திசாலித் தனமும் அல்ல, தேச பக்தியும் அல்ல என்று நாம் கருதுகிறோம்.

நமது மாகாணத் தேர்தல் கமிட்டியார் நியாயமாக நடந்து தகுதி வாய்ந்தவர்களைத் தேர்ந்தெடுப்பார்கள் என்று நம்பித்தான் காரியம் செய்யவேண்டும்.

அதற்குச் சில அறிகுறிகளும் வெளியாகி யிருக்கின்றன.

விண்ணப்ப கெடுத் தேதியை செப்டம்பர் 14உ வரையில் தள்ளிப் போட்டது மிக நல்ல அறிகுறி. காங்கிரஸில் நேருஜியின் நிலைமை என்ன




இம்மாதம் 8-ம் தேதி டில்லியில் கூடும் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி நேருஜியின் ராஜிநாமாவைப் பரிசீலனை செய்யும்.

ஆகிறது என்று தெரிந்து கொண்டு மனுப் போடுவதற்கு இதனால் அவகாசம் ஏற்படுகிறது.

"நல்ல அபேட்சகர்களையே போடப்போகிறோம். யோக்யர்களையும் திறமையுள்ளவர்களையுமே போடப் போகிறோம்" என்று ஸ்ரீ காமராஜ நாடார் சொல்லி வருகிறார்.

"அப்படி ஏதாவது தவறு ஏற்பட்டாலும் பொது ஜனங்கள் எடுத்துக் காட்டினால் திருத்தி மாற்றவும் தயாராயிருக்கிறோம்" என்று ஸ்ரீ சி. பி. சுப்பையா உறுதி கூறுகிறார்.

இந்த வார்த்தைகளையெல்லாம் நம்புவது தான் முறையே தவிர, அவநம்பிக்கையையும் சந்தேகத்தையும் வெகு தூரம் நீட்டிக்கொண்டு போவதினால் பயன் ஏற்படாது.

ஆங்காங்குள்ள பழைய தேசபக்தர்களும், யோக்கியர்களும், தகுதி வாய்ந்தவர்களும், "நமக்கு என்னத்திற்கு இந்த வம்பு!" என்று சும்மா இருக்க விரும்பலாம். அப்படிப்பட்டவர்களை நாட்டின் நலத்தை முன்னிட்டுத் தூண்டி அபேட்சகர் மனுப் போடச் செய்வது பொது மக்களின் கடமையாகும்.

தகுதி வாய்ந்தவர்கள் சில சமயம் பண வசதி இல்லாதவர்களாயிருக்கலாம். ஐந்நூறு அல்லது ஆயிரம் டெபாஸிட் கட்ட இயலாதவர்களாயிருக்கலாம். அத்தகையவர்களுக்குப் பொது மக்களே பணம் வசூல் செய்து கொடுத்து மனுப் போடச் செய்ய வேண்டும்.

தும்பை விட்டு விட்டு வாலைப் பிடித்துக் கொண்டு தொங்குவது போல் இப்போது சும்மா இருந்து விட்டுப் பின்னால் குறை கூறுவதில் பயனில்லை.

இந்திய மக்கள் ஜனநாயக ஆட்சி முறைக்குத் தகுதியுடையவர்கள்தானா என்பதற்கு இந்தப் பொதுத் தேர்தல் ஒரு சோதனை என்பதை மறந்துவிடக் கூடாது.

## மலையாள தேசத்து மகா அதிசயங்கள்!

அடாடா! எத்தனையோ உலக அதிசயங்களை நாமும் கேட்டிருக்கிறோம். ஆனால் மலையாள நாட்டிலிருந்து சில நாளாக வரும் செய்திகளைப் போன்ற அதிசயமான செய்திகளை என்றும் நாம் கேட்டதில்லை.

"திருவாங்கூர்—கொச்சி சமஸ்தான மந்திரி சபையில் பெரிய நெருக்கடி ஏற்பட்டிருக்கிறது. மந்திரிகள் எட்டுப் பேரில் ஏழுபேர் பதவியை ராஜிநாமாச் செய்து விட்டார்கள். பாக்கியுள்ள பாதி மந்திரி ஒற்றுமைக்காகப் பாடுபட்டதில் உயிரையே ராஜிநாமா செய்து விட்டார்!......"

"மந்திரி சபை நெருக்கடி ஒருவாறு தீர்ந்து விடும் என்பதற்கு அறிகுறிகள் காண்கின்றன. கேசவனுக்குப் பதில் மாதவனும், நாராயணனுக்குப் பதில் தாமோதரனும், சங்குப் பிள்ளைக்குப் பதில் கண்டுப் பிள்ளையும் மந்திரி பதவி ஒப்புக் கொண்டிருக்கிறார்கள்......"

"நேற்று அமைக்கப்பட்ட மந்திரி சபையில் மீண்டும் நெருக்கடி தோன்றியிருக்கிறது. எந்த நிமிஷமும் கை கலப்பு நேரலாம் என்று எதிர்பார்க்கப்படுகிறது......"

"கேசவன் கிழக்கேயும் சங்குப் பிள்ளை வடக்கேயும் பார்த்துக் கொண்டிருப்பதால், நெருக்கடி முதிர்ந்து வருகிறது என்று கருதப்படுகிறது. எந்த நேரமும் பூகம்பம் ஏற்படலாம்."

"மந்திரிகள் அனைவரும் கூண்டோடு கைலாசமாக டில்லிக்குப் புறப்பட்டார்கள். சகுனம் சரியாயில்லாதபடியால் திரும்பி விட்டார்கள்."

"இன்று ஸ்ரீ கானா வெங்கட்ராவ் இவ்விடம் வந்தார். திருவாங்கூர்—கொச்சி மந்திரி சபையின் நெருக்கடியைத் தீர்ப்பதற்காக 'ஸ்பெஷல்' விஜயம் செய்திருக்கிறார்......"

"மலையாளத்தில் வெளியாகும் நூற்றிருபது பத்திரிகைகள் முப்பதினாயிரத்து ஐந்நூறு வசவுகளைக் கானா வெங்கட்ராவ் பேரில் கொட்டின. ஆசாமி திக்குமுக்காடித் திரும்பி விட்டார். நெருக்கடி தீரவில்லை......"

"நெருக்கடியைத் தீர்ப்பதற்காக மோகன் லால் கௌதம் வந்தார்; ஒரு கை பார்த்தார்; நிறைய வாங்கிக் கட்டிக் கொண்டு திரும்பினார்......"

"ராஷ்டிரபதி புருஷோத்தமதாஸ் தாண்டன் வந்தார்; ஒரே தாண்டாகத் தாண்டிக் குதித்துத் திரும்பி ஓடி விட்டார்."

"சங்குப் பிள்ளை கண்டுப் பிள்ளையின் காதைக் கிள்ளினார்; கண்டுப் பிள்ளை சங்குப் பிள்ளையைப் பல்லால் கடித்தார். இருவரையும் வைத்திய ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போயிருக்கிறார்கள்......"

"தலைவர்களாகிய மந்திரிகளுக்குள் ஒற்றுமை உண்டு பண்ணுவதற்காக நூறு தொண்டர்கள் வந்திருக்கிறார்கள். மந்திரிகளின் வீட்டு வாசலில் உட்கார்ந்து சத்தியாக்கிரஹம் செய்கிறார்கள். மந்திரிகள் தங்களுக்குச் சாப்பாடு போட்டாலன்றிக் கண்டிப்பாக உண்ணாவிரதம் இருக்கப்போவதாகச் சொல்கிறார்கள்......"

"சத்தியாக்கிரஹிகளுக்குள் கேசவன் கட்சிக்கும் நாராயணன் கட்சிக்கும் அடிதடி சண்டை நடந்தது. போலீஸார் வந்து குண்டாந்தடிப் பிரயோகம் செய்து கலைத்தார்கள்."

"தொண்டர்களின் சத்தியாக்கிரஹத்தின் பலனாக எந்த நிமிஷமும் ஒற்றுமை ஏற்பட்டு விடலாம் என்று எதிர்பார்க்கப்படுகிறது......"

"எதிர்பார்த்ததற்கு மாறாக நெருக்கடி முற்றிப் போய் விட்டது. மந்திரிகள் நிமிஷத்துக்கு ஒன்பது தடவை ராஜிநாமா செய்து கொண்டிருக்கிறார்கள்!"

* * *

மலையாள காங்கிரஸும் மந்திரி சபையும் இந்த அலங்கோலமான நிலையை அடைந்திருப்பதின் காரணம் என்ன! புத்திசாலிகள் எல்லாரும் அந்த நாட்டை விட்டு வெளியூர்களுக்கு உத்தியோகத்துக்குப் போய்விட்டதால் வந்த விபத்தா! வி. பி. மேனன், கே. ஜி. மேனன், கே. ஆர். கே. மேனன், கே. பி. எஸ். மேனன், மாதவ மேனன், கேசவ மேனன் முதலியவர்கள் மலையாளம் நோக்கிச் சென்று அங்குள்ள நிலைமைக்கு ஏதாவது பரிகாரம் தேடக் கூடாதா! அல்லது அங்கே போனதும் இவர்களும் சண்டை பிடிக்கத் தொடங்கி விடுவார்களா!

மலையாளம் — கொச்சி அரசியலிலிருந்தும் மற்றும் வட இந்தியாவில் சிறிய மாகாணங்களின் அநுபவங்களிலிருந்தும் ஒன்று வெளியாகிறது. ஒரு மாகாணம் எவ்வளவுக்குச் சிறியதாயிருக்கிறதோ, அவ்வளவுக்கு அந்த மாகாணத்து அரசியல் தலைவர்களுக்குள்ளேயே சண்டை பூசல் அதிகம்; அரசாங்கத்தில் நிர்வாக ஊழலும் அதிகம்.

நாளைக்கு ஆந்திர மாகாணம் தனியே பிரிந்து போனால் அங்கும் இத்தகைய நிலைமை ஏற்படும் என்று எதிர்பார்ப்பது தவறாகாது.

அப்போது மந்திரிகளுக்குள்ளே ஒற்றுமை உண்டு பண்ணுவதற்காக ஆந்திர தேச பக்

## முட்டுக்கட்டை




எகிப்து, சூயஸ் கால்வாயில் கப்பல் போக்கு வரத்தை தடை செய்யக் கூடாது என்று ஐ. நா. சபை நிறைவேற்றிய தீர்மானத்தை எகிப்து நிராகரித்தது.

தர்கள் பலர் சத்தியாக்கிரஹமும் உண்ணாவிரதமும் அனுஷ்டிக்கும்படி நேரலாம்.

ஆகையால் ஸ்வாமி சீதாராமும் அவருடைய கோஷ்டியாரும் இப்போது உண்ணாவிரதத்தை நிறுத்திவிட்டு உயிரைக் கெட்டியாக வைத்துக் கொண்டிருப்பது நல்லது. கேவலம் மாகாணப் பிரிவினைக்காக உண்ணாவிரதம் இருந்து உயிர் துறப்பதைக் காட்டிலும் மாகாண ஒற்றுமைக்காக அந்த மகா விரதத்தைக் கடைப்பிடிப்பது மேலா யிருக்கும் அல்லவா!

# வள்ளுவர் யாருக்குச் சொன்னார்?

இருபதாம் நூற்றாண்டில் வரப்போகும் நமது மாகாணக் காங்கிரஸ் சர்க்காருக்காகவே இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் திருவள்ளுவ மாமுனிவர் ஓர் உபதேசம் செய்தார்:

எண்ணித் துணிக கருமம் துணிந்த பின்
எண்ணுவ மென்ப திழுக்கு

ஆனால் இந்த அரிய உபதேசம் நமது மாகாண மந்திரி மார்களின் செவிகளில் விழுந்ததாகத் தெரியவில்லை.

எண்ணித் துணியாமல் நமது மாகாண மந்திரிகள் செய்த காரியங்களைப் பற்றி 1949-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் 28-ம் தேதி "கல்கி" இதழில் குறிப்பிட்டிருந்தோம்.

"நம் சர்க்கார் மொத்தம் 12 பொருள்களுக்குப் புதிய வரி விதிக்கப்போவதாக முதலில் சொன்னார்கள். அவ்விதம் மசோதாவும் கொண்டு வந்தார்கள். ஆனால் காரியத்தில் நடந்தது என்ன! பன்னிரண்டு பொருள்களில் பத்துப் பொருள்களை வரி விதிப்பிலிருந்து விலக்கிவிட்டார்கள். இரண்டு பொருள்கள் தான் புது வரிக்கு உள்ளாயின.

"ஆகவே, என்ன ஏற்படுகிறது! மேற்படி வரிகளை எதிர்த்தவர்களின் எதிர்ப்பு நியாயமானது என்று ஏற்படுகிறது. மந்திரிகள் அவசரப்பட்டும் அநாவசியமாகவும் பல பொருள்களின் மீது வரிவிதிப்பதாக மசோதாக் கொண்டு வந்தார்கள் என்று ஏற்படுகிறது. அப்படிக் கொண்டு வந்தது தவறு என்றும் ஏற்படுகிறது."

இவ்விதம் நாம் எழுதி இரண்டு வருஷங்கள் ஆகின்றன. ஆனால் சென்னை சர்க்கார் மறுபடியும் அதே தவறையே இப்போது செய்திருக்கிறார்கள்.

1. 150 ரூபாய்க்கு மேல் கிஸ்தி செலுத்தும் நிலங்களுக்கு உபரி வரி விதிக்கப்படும் என்று சென்னை சர்க்கார் முதலில் அறிவித்தார்கள்.

2. உணவுப் பொருளல்லாத வியாபார விளை பொருள்களுக்கு விசேஷ வரி விதிக்கப்படும் என்றும் கூறினார்கள்.

3. நிலத்தின் பெறுமான உயர்வின்மீது உபரி வரி விதிப்பதாகத் தெரிவித்தார்கள்.

4. விவசாய நிலங்கள் சம்பந்தப்பட்டவரையில் மரண வரி விதிக்க வேண்டும் என்று இந்திய சர்க்காருக்குச் சிபார்சு செய்யப் போவதாகச் சொன்னார்கள்.

சர்க்காரின் மேற்படி யோசனைகளைக் கண்டித்து சென்னை சட்டசபை காங்கிரஸ் கட்சியில் பலர் கிளர்ச்சியாகப் பேசியதால் 150 ரூபாய்க்கு மேல் கிஸ்தி செலுத்தும் நிலங்களுக்கு விதிக்க உத்தேசித்திருந்த உபரி வரியை இப்பொழுது கைவிட்டு விட்டார்கள்.

வியாபார விளை பொருள்களில் மணிலாக் கொட்டை, பருத்தி முதலிய ஒரு சில பொருள்களுக்கு வரி விதிப்பதில்லை என்று தங்கள் அபிப்பிராயத்தை முதலில் மாற்றிக் கொண்டார்கள். பிறகு மறுபடியும் நினைத்துக்கொண்டு வெங்காயம், வாழைப் பழம், மாம்பழங்களையும் அதிக வரி ஜாப்தாவிலிருந்து எடுத்து விடுவதாகச் சொல்லி யிருக்கிறார்கள்.

மற்ற வியாபார விளை பொருள்களுக்கு விதிக்க உத்தேசித்திருந்த வரியைக் குறைக்கவும் தீர்மானித்திருக்கிறார்கள்.

மேற்படி விளை பொருள்களுக்கு வரி விதிப்பதன் மூலம் ஒன்றரைக் கோடி ரூபாய் வருமானம் கிடைக்கும் என்று சர்க்கார் எதிர்பார்த்தார்கள். ஆனால் இப்போதோ எருமை தேய்ந்து சிற்றெறும்பு ஆன கதையாக அந்த இனங்களின் மூலம் ஐம்பது லட்சம் ரூபாயே வருமானம் கிடைக்கும் என்று தெரிகிறது.

எதிர்ப்பு அதிகமாக இருந்ததால், மரண வரி விதிக்கவேண்டும் என்று இந்திய சர்க்காருக்குச் சிபார்சு செய்யும் யோசனையையும் வாபஸ் செய்து கொள்வதாக அறிவித்திருக்கிறார்கள்.

நமது மாகாண மந்திரிகள் வள்ளுவர் வாக்கை எவ்வளவு லட்சணமாகக் கடைப்பிடிக்கிறார்கள் என்பதற்கு வேறு என்ன அத்தாட்சி வேண்டும்!

சர்க்கார் நிர்வாகத்தை நடத்தும் பொறுப்பு வாய்ந்த மந்திரிகள் முதலிலேயே நீர்க்கயோசனை செய்து ஏழைகளைப் பாதிக்காத முறையில் புது வரிகளைக் கொண்டு வரவேண்டும். அவற்றைக் கொண்டுவந்த பின் உறுதியாக நின்று நிறைவேற்ற வேண்டும்.

ஆனால் சென்னை மந்திரிகள் செய்துவரும் காரியங்களிலிருந்து அவர்கள் தங்கள் மனதையே தாங்கள் சரிவர உணர்ந்து கொள்ளவில்லை என்று தெரிகிறது.

இவ்விதம் அவசரப்பட்டுக் கொண்டு வரிகளை விதிப்பதும் பிறகு எதிர்ப்பு காரணமாக அவற்றை ரத்து செய்வதும் எதிர்காலத்தில் விபரீதமாக முடியும். பின்னால் சர்க்கார் நியாயமான வரிகளை விதித்தாலும் அவற்றைக் கடுமையாக எதிர்த்து மாற்றும்படி செய்து விடலாம் என்ற எண்ணம் ஏற்படுவதற்கு இடம் கொடுக்கும் அல்லவா!

எனவே, 'எண்ணித் துணிக கர்மம்' என்னும் வள்ளுவர் வாக்கை இனிமேலாவது நம்முடைய மாகாண மந்திரிகள் உறுதியாகக் கடைப்பிடிப்பார்கள் என்று நம்புகிறோம்.

# பாரதியைப் போற்றுவோம்

தமிழ் நாட்டில் கருத்து வேற்றுமைக் கிடமின்றி அனைவரும் உற்சாகமாகக் கொண்டாடக்கூடிய புண்ணிய தினம் செப்டம்பர் 11-ந் தேதி வருகிறது.

வருகிற வாரத்தில் தமிழ் மக்கள் எங்கெங்கே இருக்கிறார்களோ, அங்கெல்லாம் பாரதி தினம் கொண்டாடுவார்கள்.

தமிழுக்கும் தமிழ் நாட்டுக்கும் இன்னும் ஜீவசக்தி பூரணமாக இருக்கிறது என்பதை இந்த நூற்றாண்டில் சந்தேகமற நிரூபித்த மகாகவி ஸ்ரீ சுப்பிரமண்ய பாரதியார்.

ஆதலின் அவர் அமரரான புண்ணிய நாளைக் கொண்டாடும்போது, தமிழ்த் தாயின் அமரத் தன்மையைக் கொண்டாடுகிறோம்.

தமிழைக் கொண்டாடுகிறோம்; தமிழ்க் கவிதையைக் கொண்டாடுகிறோம்; வள்ளுவர் முதல் வழி வழியாக வந்த தமிழ்க் கவிஞர் பரம்பரையைக் கொண்டாடுகிறோம்.

தமிழரின் பண்பாட்டைக் கொண்டாடுகிறோம்; தமிழரின் கலைச் செல்வங்களைக் கொண்டாடுகிறோம்.

முருகனையும் கண்ணனையும் கொண்டாடுகிறோம்; திருமகளையும் கலைமகளையும் கொண்டாடுகிறோம்; பராசக்தியையும் முத்து மாரியையும் கொண்டாடுகிறோம்.

மாதர் விடுதலையைக் கொண்டாடுகிறோம்; மக்களின் விடுதலையைக் கொண்டாடுகிறோம்.

பாருக்குள்ளே நல்ல பாரத நாட்டைக் கொண்டாடுகிறோம்; நம் தந்தையர் நாடாகிய செந்தமிழ் நாட்டைக் கொண்டாடுகிறோம்.

இப்படி, பாரதியாரைக் குறித்த கொண்டாட்டத்தில் எத்தனையோ விதமான கொண்டாட்டங்கள் அடங்கி யிருக்கின்றன.

இதைப்போல் தமிழ் மக்கள் பக்தி சிரத்தையுடனும் உற்சாகத்துடனும் கொண்டாடக் கூடிய திருநாள் வேறு என்ன இருக்கிறது!

பாரதியார் பிறந்த எட்டயபுரத்தில் பாரதி ஞாபகார்த்த மண்டபத்தில் அப் புண்ணிய தினத்தைச் சிறப்பாகக் கொண்டாடப் போகிறார்கள். சென்னையிலும் இலங்கையிலும் டில்லியிலும் கல்கத்தாவிலும் பர்மாவிலும் தென்னாப்பிரிக்காவிலும் வேறு பல இடங்களிலும் அந்தத் தினத்தைக் கொண்டாடுவார்கள்.

நாமும் நமது அட்டையில் பாரதியாரின் திரு உருவத்தையும் அவர் கவிதைச் சித்திரங்களையும் வெளியிட்டுக் கொண்டாடுகிறோம்.

# புத்தகாலயத்துக்கு வேண்டியது என்ன?

சென்னை நகர சபையில் சமீபத்தில் ஓர் அங்கத்தினர் கேள்வி ஒன்றைப் போட்டார். "புத்தகாலயத்துக்கு என்று வரி வாங்கிப் பணம் சேர்த்து வைத்திருக்கிறீர்களே! அந்தப் பணம் செலவாகவில்லையாதலால் வேறு எதற்காவது உபயோகிக்கலாமே!" என்று கேட்டார். "புத்தகாலயப் பணத்தை வேறு காரியத்துக்கு உபயோகிப்பது சாத்தியமில்லை!" என்று பதில் சொல்லப்பட்டது.

நம்முடைய நாட்டில் சாதாரணமாய் நல்ல காரியங்களுக்குப் பணம் கிடைப்பதுதான் கஷ்டமாயிருக்கும். பணம் இருந்தால் எவ்வளவோ காரியங்களைச் சாதித்து விடலாமே என்று தோன்றும். "திட்டம் போட்டு என்ன பயன்! திட்டத்தை நடத்தப் பணம் எங்கே!" என்று கேட்பார்கள்.

புத்தகாலயங்களை ஏற்படுத்துவதற்கு இப்போது பணம் தயாராயிருக்கிறது. ஆனால் புத்தகாலயங்கள் ஏற்படவில்லை. அந்தப் பணத்தைக் கொண்டு வேறு செலவு செய்யலாமே என்ற யோசனையும் சொல்லப்படுகிறது. இது விந்தையான நிலைமை அல்லவா!

இருபது ஆண்டுகளுக்கு முன்னால் சென்னையில் புத்தகாலயச் சங்கம் (Madras Library Association) என்று ஒரு சங்கம் ஆரம்பமாயிற்று. நாடெங்கும் புத்தகாலயங்களை ஏற்படுத்தி மக்களிடையே கல்வியறிவை வளர்க்க வேண்டும் என்பதும் சங்கத்தின் நோக்கம். இதற்காக இந்தச் சங்கத்தினர் மிக்க சிரமம் எடுத்துப் பிரயத்தனம் செய்து வந்தார்கள். அந்தப் பிரயத்தனம் இருபது ஆண்டுகளுக்குப் பிறகு பயன் தந்திருக்கிறது. இச் சங்கத்தின் முயற்சியினால் சென்னைச் சட்டசபையில் சென்ற வருஷம் புத்தகாலயச் சட்டம் நிறைவேறியது. இங்கிலாந்து முதலிய நாகரிக நாடுகளில் உள்ளதை அனுசரித்த சட்டம் இது. இதன்படி நகரசபைகளும் பஞ்சாயத்து போர்டுகளும் 'புத்தகாலய வரி' என்று ஒரு தனி வரி வசூலிக்கலாம். சென்னை நகரத்தைத் தவிர மற்ற இடங்களில் வசூலாகும் வரியைப் போல் சமமான தொகை மாகாண சர்க்கார் நன்கொடை அளிப்பார்கள். இந்தப் பணத்தைக் கொண்டு நகர சபைகளும் பஞ்சாயத்துக்களும் புத்தகாலயங்கள் ஏற்படுத்தலாம். மக்களிடையே கல்வியறிவைப் பரப்பலாம்.

சட்டம் சென்ற வருஷம் நிறைவேறியவுடனே சென்னை நகரசபையார் புத்தகாலய வரி (Library Cess) வசூலிக்கத் தொடங்கினார்கள். வசூலித்து ஐந்து லட்சம் ரூபாய் சேர்த்து வைத்திருக்கிறார்கள். ஆனால் புத்தகாலயம் ஒன்றுகூட இது வரை ஆரம்பித்தபாடில்லை. அதற்கென்று சர்க்கார் 'லைப்ரரி அதாரிட்டி' என்ற பெயருடன் அதிகார ஸ்தாபனங்களை ஏற்படுத்தி யிருக்கிறார்கள். இன்னும் இந்த ஸ்தாபனங்கள் எங்கும் வேலை தொடங்கியதாகத் தெரியவில்லை.

ஆனால் சீக்கிரத்தில் வேலை தொடங்கி விடுவார்கள் என்பது நிச்சயம். அதிலும் சென்னை நகரசபையில் பணத்தைப் பற்றிக் கேள்வி கேட்டு விட்டார்கள் அல்லவா! ஆகையால்

உடனே வேலை ஆரம்பித்து விடுவார்கள். சட்டென்று ஒரு பெரிய கட்டிடத்தை வாடகைக்குப் பேசுவார்கள். அல்லது விலைக்கு வாங்குவார்கள். பளபள வென்று வார்னிஷ் கொடுத்து ஜொலிக்கும் மேஜைகளும் நாற்காலிகளும் வாங்கிப் போடுவார்கள். மானேஜர், உதவி மானேஜர், டைபிஸ்டுகள், குமாஸ்தாக்கள், பியூன்கள் முதலியவர்களை நியமிப்பார்கள். இவர்களுக்குச் சம்பளம் எவ்வளவு, வருஷா வருஷம் சம்பள உயர்வு எவ்வளவு, கிராக்கிப்படி எவ்வளவு, வீட்டு வாடகை அலவன்ஸ் எவ்வளவு என்பதை நிர்ணயிப்பார்கள்.

பிறகு பணம் பாக்கியிருந்தால் நகரின் பல பகுதிகளில் புத்தகாலயங்களுக்கு இடம் பிடிப்பார்கள். வாடகை கொடுப்பார்கள். பெஞ்சி நாற்காலி மேஜை அலமாரி முதலிய சாமான்களை வாங்கி நிரப்புவார்கள்.

கடைசியாக, புத்தகாலயத்தில் வைக்கப் புத்தகம் வாங்க வேண்டும் என்று பார்க்கும் போது, அதற்குப் பணம் இராது!

மேஜை நாற்காலிகள் வாங்கியது போகக் கொஞ்சம் பணம் மிஞ்சி யிருந்தால், அதைக் கொண்டு சில புத்தகங்கள் வாங்கலாமா என்று பார்ப்பார்கள்.

அப்போது ஒரு முக்கியமான விஷயம் புலனாகும்.

**ஆதாவது பணம் இருந்தாலும் அதைக் கொண்டு வாங்குவதற்குத் தகுந்த புத்தகங்கள் இல்லை!**

**பொது மக்கள் படித்துப் பயன் பெறுவதற்குரிய தமிழ்ப் புத்தகங்கள் இல்லை!**

இந்த விஷயம் சந்தேகமறத் தெரிந்த பிறகு வேறு என்ன செய்வது! மிச்சமுள்ள பணத்தையும் கட்டிடம் மேஜை நாற்காலி சிப்பந்திச் செலவுகளில் போட வேண்டியதுதான்.

புத்தகாலயத்துக் கென்று வரி கொடுத்த பொது மக்கள் மேற்படி கட்டிடங்கள் நாற்காலிகள் மேஜைகள் அலமாரிகளை வலம் வந்து கன்னத்தில் போட்டுக் கொண்டு கும்பிட்டு விட்டுத் திரும்ப வேண்டியதுதான்!

புத்தகங்களைப் படித்துக் கண்ணைக் கெடுத்துக் கொள்ள வேண்டிய அவசியம் யாருக்கும் ஏற்படாது அல்லவா!

இத்தகைய விசித்திரமான அவல நிலைமை ஏற்படாமலிருக்கும் பொருட்டுச் சில காலத்துக்கு முன்பு தமிழ் எழுத்தாளர் சங்கத்தார் ஒரு யோசனையை வெளியிட்டார்கள். மாகாண அரசாங்கத்தார் புத்தகாலயங்களுக்குப் பண மானியம் கொடுத்து அது மேஜை நாற்காலிகளில் வீண் விரயமாவதற்குப் பதிலாக, நல்ல புத்தகங்களைத் தேர்ந்தெடுத்து மொத்தமாக வாங்கிப் புத்தகசாலைகளுக்கு விநியோகிக்கலாமே என்பதுதான் அந்த யோசனை.

இப்படி மொத்தமாக வாங்குவதாயிருந்தால் பதிப்பாளர்களும் உற்சாகமாக நல்ல புத்தகங்களை வெளியிடுவார்கள்; குறைந்த விலைக்கும் கொடுப்பார்கள்.

அதுமட்டுமின்றி, பொது மக்களுக்கு உண்மையில் பயன்படக் கூடாத உபயோகமற்ற புத்தகங்களை வாங்கி நிரப்ப இடமில்லாமலும் போய்விடும்.

புத்தகாலயங்களில் உபயோகமான நல்ல புத்தகங்களே வைக்கப்படுகின்றன என்பதை அரசாங்கத்தார் நிச்சயப்படுத்திக் கொள்ளலாம் அல்லவா!

• • •

புத்தகாலயச் சட்டமும் புத்தகாலய வரியும் நல்ல முறையில் பயன்பட வேண்டும். புத்தகாலய வரி கொடுப்பவர்கள் இதில் சிறிது கவனம் செலுத்த வேண்டும்.

புத்தகாலய இயக்கத்தில் சிரத்தையுள்ள தமிழ் அன்பர்கள் சிலர் சென்ற வாரத்தில் கூடி யோசித்துச் சென்னையில் புத்தகாலய மகா நாடு ஒன்று நடத்துவது என்று தீர்மானித்திருக்கிறார்கள். இந்த மகா நாட்டுக்கு வரவேற்பு சபையும் அமைக்கப்பட்டிருக்கிறது. நமது மாகாணத்திலுள்ள சமூக ஊழியர்களில் தலை சிறந்தவரான மாஜி நீதிபதி ஸ்ரீ வி. பாஷ்யமய்யங்கார் அவர்கள் வரவேற்பு சபைத் தலைவராகவும், ஸ்ரீ ட்ரோஜன் அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் காரியதரிசியாகவும், தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்கள்.

புத்தகாலய மகாநாட்டில் கலந்து கொள்ள விரும்பும் வெளியூர் அன்பர்கள் ஸ்ரீ ட்ரோஜன் அண்ணாமலைச் செட்டியார், 'எவர் கிரீன்,' தியாகராஜ ரோட், தியாகராஜ நகர், சென்னை என்ற விலாசத்துக்குத் தயவு செய்து எழுதும்படி கேட்டுக் கொள்கிறோம்.

## என் வோட்டு எங்கே?




"வரப்போகிற பொதுத் தேர்தல், அபேட்சகர்களுக்கு மட்டும் சோதனையல்ல; வோட்டுப் போடுபவர்களுக்கும் கடுமையான சோதனையாக இருக்கும்."

—ராஜன் பாபு

# பொன்னியின் செல்வன்

## கல்கி

அத்தியாயம் 30

## துவந்த யுத்தம்

முடிவில்லாத வழியில் குதிரைகள் போய்க் கொண்டிருப்பதாக வந்தியத்தேவனுக்குத் தோன்றியது. இந்த வைஷ்ணவன் நம்மை உண்மையில் ஏமாற்றி விட்டானா? சத்துருக்களிடம் நம்மைக் கொண்டு போய் ஒப்புவிக்கப் போகிறானா?

இருபுறமும் காடுகள் அடர்ந்திருந்தன. அவற்றுக்குள் பார்த்தால் கன்னங்கரிய பயங்கரமான இருள். அந்த இருண்ட காட்டில் என்னென்ன அபாயங்கள் என்னென்ன விதத்தில் இருக்கின்றனவோ, தெரியாது. சிறுத்தைகள், கரடிகள், யானைகள், விஷஜந்துக்கள், — இவற்றுடன் பகைவர்களும் மறைந்திருக்கக் கூடும்; யார் கண்டது? தெற்குத் திசையில் சோழ சைன்யம் கடைசியாகப் பிடித்திருக்கும் இடம் தம்பளைதான் என்று சொன்னார்களே? இவன் நம்மை எங்கே அழைத்துப் போகிறான்?

நல்ல வேளையாக நிலா வெளிச்சம் கொஞ்சம் இருந்தது. சந்திர கிரணங்கள் வானுற வோங்கிய மரங்களின் உச்சியில் தவழ்ந்து விளையாடின. அதனால் ஏற்பட்ட சலன ஒளி சில சமயம் பாதையிலும் விழுந்து கொண்டிருந்தது. எதிரே மூன்று குதிரைகள் போவது சிலசமயம் கண்ணுக்கு நிழல் உருவங்களாகத் தெரிந்தது. ஆனால் குதிரைகளின் குளம்புச் சத்தம் மட்டும் இடைவிடாமல் கேட்டுக் கொண்டிருந்தது.

திடீரென்று வேறு சில சத்தங்கள் கேட்டன. காட்டின் நடுவில் எதிர்பார்க்க முடியாத சப்தங்கள். பல மனிதக் குரல்களின் கோலாகல சப்தம். குதூகலமாக ஆடிப்பாடும் சப்தம். ஆ! அதோ மரங்களுக்கு இடையில் வெளிச்சம் தென்படுகிறது. சுளுந்துகளின் வெளிச்சத்தோடு பெரிய காள வாய் போன்ற அடுப்புகள் எரியும் வெளிச்சமும் தெரிகிறது. ஆகா! இந்தக் காட்டின் நடுவே தாவடி போட்டுக் கொண்டு குதூகலமாயிருக்கும் வீரர்கள் யார்? சோழ நாட்டு வீரர்களா? அல்லது பகைவர் படையைச் சேர்ந்த வீரர்களா?

இதைப் பற்றி வந்தியத் தேவன் மிகச் சொற்ப நேரம்தான் சிந்தித்திருப்பான். அந்தச் சிறிய நேரத்தில் முன்னால் போன குதிரைகள் சட்டென்று நின்றதையும் ஒரு குதிரை பளீர் என்று திரும்பியதையும் வந்தியத்தேவன் கவனிக்கவில்லை. திரும்பிய குதிரை முன்னோக்கி வந்து வந்தியத் தேவன் குதிரையை அணுகியது. அதன் மேலிருந்தவன் வந்தியத் தேவன் பக்கம் சட்

டென்று சாய்ந்து ஓங்கி ஒரு குத்து விட்டான். அந்தக் குத்தின் அதிர்ச்சியினால் வந்தியத்தேவன் கதி கலங்கித் தடுமாறியபோது அவனுடைய ஒரு முழங்காலைப் பிடித்து ஓங்கித் தள்ளினான். வந்தியத்தேவன் தடால் என்று தரையில் விழுந்தான். வந்த வேகத்தில் அவன் குதிரை அப்பால் சிறிது தூரம் பாய்ந்து சென்று அப்புறம் நின்றது.

இதற்குள் அவனைத் தள்ளிய வீரன் குதிரையிலிருந்து கீழே குதித்து வந்தியத்தேவன் அருகில் வந்தான். திக்பிரமை கொண்டவனாய்த் தள்ளாடி எழுந்திருக்க முயன்ற வந்தியத் தேவனுடைய இடையிலிருந்த கத்தியைப் பறித்துத் தூர வீசி எறிந்தான். உடனே வந்தியத்தேவனுக்குப் புத்துயிர் வந்தது. அத்துடன் ஆத்திரம் பொங்கிக் கொண்டு வந்தது. ஒரு குதி குதித்து எழுந்து நின்றான். இரண்டு கையையும் இறுக மூடிக் கொண்டு வஜ்ரம் போன்ற முஷ்டியினால் தன்னைத் தள்ளிய ஆளைக் குத்தினான். குத்து வாங்கிக் கொண்டவன் சும்மா இருப்பானா? அவனும் தன் கைவரிசையைக் காட்டினான். இருவருக்குள்ளும் பிரமாதமான துவந்த யுத்தம் நடந்தது. கடோத்கஜனும் இடும்பனும் சண்டை போடுவது போல் போட்டார்கள். வேடன் வேடங் தரித்த சிவபெருமானும் அர்ச்சுனனும் கட்டிப் புரண்டதைப் போல் புரண்டார்கள். திக்கஜங்களில் இரண்டு இடம் பெயர்ந்து வந்து ஒன்றோடொன்று மோதிக் கொள்வது போல் அவர்கள் மோதிக் கொண்டார்கள்.

வந்தியத் தேவனுடன் வந்த ஆழ்வார்க்கடியானும் அவர்களுக்கு முன்னால் வந்த வீரர்களும் விலகி நின்று ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டு நின்



ரர்கள். மரக் கிளைகளின் அசைவினால் அடிக்கடி சலித்த நிலா வெளிச்சத்தில் அவர்கள் அந்த அதிசயமான சண்டையைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

சீக்கிரத்தில் காலடிச் சத்தங்கள் கேட்டன. கையில் கொளுத்தப்பட்ட களுந்துகளுடன் வீரர்கள் சிலர் மரக் கிளைகளை விலக்கிக் கொண்டு அவ்விடத்திற்கு வந்தார்கள். அப்படி வந்தவர்களும் அதிசயத்துடன் அந்தத் துவந்த யுத்தத்தைப் பார்த்துக் கொண்டு நிற்கலானார்கள். சிறிது நேரத்திற் கெல்லாம் சுற்றிலும் ஒரு பெரிய கூட்டம் கூடிவிட்டது.

கடைசியாக வந்தியத் தேவன் கீழே தள்ளப்பட்டான். அவனைத் தள்ளிய வீரன் அவன் மார்பின்பேரில் ஏறி உட்கார்ந்துகொண்டு இடையில் சுற்றியிருந்த துணிச் சுருளை அவிழ்த்தான். அதற்குள்ளிருந்த ஓலையைக் கைப்பற்றினான். அதைத் தடுப்பதற்கு வந்தியத்தேவன் ஆனமட்டும் முயன்றும் அவன் முயற்சி பலிக்கவில்லை.

ஓலை அவ் வீரனுடைய கையில் சிக்கியதும் துள்ளிப் பாய்ந்து சுற்றிலும் நின்றவர்கள் பிடித்திருந்த களுந்து வெளிச்சத்தண்டை சென்றான். அவன் ஒரு சமிக்ஞை செய்யவும் மற்றும் இரு வீரர்கள் ஓடி வந்து வந்தியத்தேவன் தரையிலிருந்து எழுந்திருக்க முடியாமல் பிடித்துக் கொண்டார்கள்.

வந்தியத்தேவன் சொல்ல முடியாத ஆத்திரத்துடனும் தாபத்துடனும் "பாவி வைஷ்ணவனே! இப்படிப் பட்ட சிநேகத் துரோகம் செய்யலாமா! அவனிடமிருந்து அந்த ஓலையைப் பிடுங்கு!" என்று கத்தினான்.

"அப்பனே! என்னால் அது இயலாத காரியம் ஆயிற்றே!" என்றான் ஆழ்வார்க்கடியான்.



"சீச்சீ! உன்னைப் போன்ற கோழையை நான் பார்த்ததேயில்லை! உன்னை வழித் துணைக்கு நம்பி வந்தேனே?" என்றான் வந்தியத்தேவன்.

ஆழ்வார்க்கடியான் குதிரையிலிருந்து சாவதானமாக இறங்கி வந்தியத்தேவன் அருகில் சென்று, அவன் செவியில், "அட அசடே! ஓலை நீ யாருக்குக் கொண்டு வந்தாயோ, அவரிடந்தான்போயிருக்கிறது! ஏன் வீணாகப் புலம்புகிறாய்?" என்றான்.

களுந்து வெளிச்சத்தில் ஓலையைப் படித்துக் கொண்டிருந்த வீரனுடைய முகத்தை மற்ற வீரர்கள் பார்த்து விட்டார்கள். உடனே ஒரு மகத்தான குதூகல ஆரவாரம் அவர்களிடமிருந்து எழுந்தது.

"பொன்னியின் செல்வர் வாழ்க! வாழ்க!"

"அன்னிய மன்னரின் காலன் வாழ்க!"

"எங்கள் இளங்கோ வாழ்க!"

"சோழ குலத் தோன்றல் வாழ்க!" என்பன போன்ற கோஷங்கள் எழுந்து அந்த வனப் பிரதேசமெல்லாம் பரவின. அவர்களுடைய கோஷங்களின் எதிரொலியே போல் மரக் கிளை

யில் தூங்கிக் கொண்டிருந்த பட்சிகள் விழித்தெழுந்து இறகுகளைச் சடசட வென்று அடித்துக் கொண்டு பலவித ஒலிகளைச் செய்தன.

இதற்குமுன் வந்திருந்தவர்களைத் தவிர இன்னும் பல வீரர்களும் என்ன விசேஷம் என்று தெரிந்து கொள்வதற்காகத் திடுதிடு வென்ற சத்தத்துடனே மரஞ் செடி கொடிகளை விலக்கிக் கொண்டு ஓடி வந்தார்கள். கூட்டம் பெருகுவதைக் கண்ட வீரன் சுற்றிலும் ஒரு முறை திரும்பிப் பார்த்து, "நீங்கள் அனைவரும் பாசறைக்குச் செல்லுங்கள். விருந்துக்கு வேண்டிய ஏற்பாடு செய்யுங்கள். சற்று நேரத்துக்குள் நான் வந்து விடுகிறேன்" என்று சொல்லவே, அவர்கள் எல்லாரும் ஒரு மனிதனைப் போல் விரைந்து அவ்விடம் விட்டுப் போய் விட்டார்கள்.

நன்றாகக் குத்தும் அடியும் பட்ட வந்தியத்தேவன் தரையில் உட்கார்ந்தபடி இதையெல்லாம் பார்த்துக்கொண்டிருந்தான். உடம்பில் அடிபட்ட வலியெல்லாம் மறந்து விடும்படியான அதிசயக் கடலில் அவன் மூழ்கியிருந்தான்.

"ஆகா! இவர்தானா இளவரசர் அருள்மொழிவர்மர்! இவர் கையிலே தான் எவ்வளவு வலிவு! என்ன விரைவு! குட்டுப்பட்டாலும் மோதிரக் கையால் குட்டுப் படவேண்டும் என்பார்களே! குத்துப் பட்டால் இவர் கையினால் அல்லவா குத்துப்படவேண்டும்! இவரிடம் அர்ச்சுனனுடைய அழகும் கம்பீரமும் இருக்கிறது! பீமசேனனுடைய தேக பலம் இருக்கிறது! நாடு நகரமெல்லாம் இவரைப் போற்றிப் புகழ்வதில் ஆச்சரியம் ஒன்றுமில்லைதானே!" என்று எண்ணமிட்டுக் கொண்டிருந்தான்.

இந்தக் கதைக்குப் பெயர் அளித்த அரசிளங் குமாரரை, தமிழகத்தின் சரித்திரத்திலேயே இணை யாரும் சொல்ல முடியாத வீராதி வீரரை, சோழ மன்னர் குலத்தை அழியாப் புகழ் பெற்ற அமரர் குலமாக்கினவரை, பின்னால் இராஜ ராஜர் என்று பெயர் பெறப்போகும் அருள்மொழிவர்மரை, இவ்விதம் சமயமில்லாத சமயத்தில் அசந்தர்ப்பமான நிலைமையில், இராஜகுல சின்னம் எதுவும் இல்லாமல் நேயர்களுக்கு அறிமுகம் செய்து வைக்கும்படி நேர்ந்து விட்டது. இது நேயர்களுக்குச் சிறிது மனக் குறை அளிக்கக் கூடியது இயற்கைதான்! ஆயினும் என்ன செய்யலாம்? நம் கதாநாயகனாகிய வந்தியத் தேவனே இப்போதுதான் அவரை முதன் முதலில் சந்தித்திருக்கிறான் என்றால், நாம் எப்படி அவரை முன்னதாகப் பார்த்திருக்க முடியும்!

அருள்மொழித் தேவர் வந்தியத்தேவனை நோக்கிச் சமீபத்தில் வந்தார். மீண்டும் அவருடைய கை முஷ்டியின் பலத்தைச் சோதிக்க வருகிறாரோ என்று வந்தியத்தேவன் ஒரு கணம் திடுக்கிட்டுப் போனான்.

ஆனால் அவருடைய புன்னகை ததும்பிய மலர்ந்த முகத்தைப்பார்த்து அந்தச் சந்தேகத்தை மாற்றிக் கொண்டான்.

"அன்பரே! வருக! வருக! அழகிய இலங்கைத் தீவுக்கு வருக! சோழ நாட்டு வீராதி வீரர்களுடனே சேர்வதற்கு இத்தனை தூரம் கடல் கடந்து வந்தீர் அல்லவா? அப்படி வந்த உமக்கு நான் அளித்த வீர வரவேற்பு திருப்தி அளித்திருக்கிறதா? அல்லது அது போதாது, இன்னும் சிறிது படாடோபமான வரவேற்பு அளிக்க வேண்டும் என்று கருதுகிறீரா?" என்று இளவரசர் கூறிப் புன்னகை பூத்தார்.

வந்தியத்தேவன் குதித்து எழுந்து வணக்கத்துடன் நின்று, "இளவரசே! தங்கள் தமக்கையார் அளித்த ஓலை தங்களிடம் சேர்ந்து விட்டது. என் கடமையும் தீர்ந்து விட்டது. இனி இந்த உயிரைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டிய அவசியம் எனக்கில்லை. தங்களுக்கு விருப்பமானால் இன்னும் சிறிது நேரம் நாம் யுத்த தாண்டவம் படித்துப் பார்க்கலாம்!" என்றான்.

"ஆகா! உமக்கு என்ன சொல்வதற்கு? உம் உயிரைப் பற்றி இனி உமக்குக் கவலையில்லை. அந்தக் கவலை இனி என்னுடையது. இல்லாவிடில் நாளைக்கு இளைய பிராட்டிக்கு என்ன மறுமொழி சொல்வேன்? நண்பரே! இப்போது நான் படித்த ஓலை என் தமக்கையாரின் திருக் கரத்தினாலேயே எழுதப்பட்டதாகத் தெரிகிறது. அவர் உம்மிடம் அதை நேரில் கொடுத்தாரா?" என்று கேட்டார்.

"ஆம், இளவரசே! இளையபிராட்டியின் திருக்கரங்களிலிருந்து நேரில் இந்த ஓலையைப் பெறும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. பின்னர் எங்கும் நிற்காமல் இரவு பகல் பிரயாணம் செய்து வந்தேன்" என்றான்.

"அது நன்றாய்த் தெரிகிறது. இல்லாவிடில் இவ்வளவு விரைவில் இங்கு வந்திருக்க முடியுமா? இப்படிப்பட்ட அரிய உதவி செய்தவருக்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்!" என்று சொல்லி விட்டு, இளவரசர் வந்தியத் தேவனை மார்புற அணைத்துக் கொண்டார். அப்போது வந்தியத் தேவன் சொர்க்க லோகத்தில் தான் இருப்பதாகவே எண்ணினான். அவன் உடம்பிலிருந்த வலி யெல்லாம் மாய மாய் மறைந்து விட்டது.

## அத்தியாயம் 31

# "ஏலேல சிங்கன்" கூத்து

வனத்தின் மத்தியில் உலர்ந்த குளத்தைச் சுற்றி மரங்கள் வளைவு வரிசையாக வளர்ந்து அதனால் இடைவெளி ஏற்பட்டிருந்த இடத்தில் சுமார் ஆயிரம் சோழ வீரர்கள் தாவடி போட்டிருந்தார்கள். அவர்களுடைய சாப்பாட்டுக்காகப் பெரிய பெரிய கல்லடுப்புகளில் ஜுவாலை வீசிய நெருப்பின் பேரில் பிரம்மாண்டமான தவலைகளில் கூட்டாஞ் சோறு பொங்கிக் கொண்டிருந்தது. சட்டிகளிலும் அண்டாக்களிலும் வெஞ்சனங்கள் வெந்து கொண்டிருந்தன. இவற்றிலிருந்து எழுந்த நறுமணம் அந்த வீரர்களின் நாவில் ஜலம் சுரக்கச் செய்தது. சோறு பொங்கி முடியும் வரையில் பொழுது போவதற்காக அவர்கள் ஆடல் பாடல் களியாட்டங்களில் ஈடுபட்டிருந்தார்கள். இச் சமயத்தில் அவர்களுடைய உள்ளங் கவர்ந்த அரசிளங் குமாரரும் வந்து விடவே, அவ்வீரர்களின் குதூகலம் அளவுகடந்ததாயிற்று. அந்த எல்லைக் காவல் படையின் தளபதி மிகவும் சிரமப் பட்டு அவர்களுக்குள்ளே ஒழுங்கை நிலைநாட்டினார். எல்லாரையும் அமைதியுடன் பாதிமதியின் வடிவமான வட்டத்தில் வரிசையாக உட்காரும்படி செய்தார்.

பெரியதொரு ராட்சத மரத்தை வெட்டித் தள்ளி அதன் அடிப் பகுதியை மட்டும் பூமிக்கு மேலே சிறிது நீட்டிக் கொண்டிருக்கும்படி விட்டிருந்தார்கள். இளவரசர் வந்து அந்த அடிமரத்துச் சிம்மாதனத்தின் மீது அமர்ந்தார். இப்போது அவர் யானைப் பாகன்போல் உடை தரித்திருக்கவில்லை. தலையில் பொற் கிரீடமும், புஜங்களில் வாகுவலயங்களும், மார்பில் முத்து மாலைகளும் அணிந்து, அரையில் பட்டுப் பீதாம்பரம் தரித்து அமர்ந்திருந்தார். அவரைச் சுற்றி எல்லைக் காவல் தளபதியும் வந்தியத் தேவனும் ஆழ்வார்க்கடியானும் உட்கார்ந்திருந்தார்கள்.

இளவரசரை மகிழ்விப்பதற்காக ஏற்பாடு செய்திருந்த ஏலேல சிங்கன் சரித்திரக் கூத்து ஆரம்பமாயிற்று.

இந்தச் சமயம் சோழ வீரர்கள் இலங்கையில் பெரும் பகுதியைப் பிடித்திருந்ததுபோல் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் ஒரு தடவை தமிழ் வீரர்கள் ஈழ நாட்டைக் கைப்பற்றி யிருந்தார்கள். அப்போது அத்தமிழ் வீரர்களின் தலைவனாக விளங்கியவன் ஏலேல சிங்கன். அவனால் துரத்தப்பட்டு இலங்கை அரசன் சிலகாலம் மலைநாட்டில் போய் ஒளிந்திருந்தான். அவனுடைய இளம் புதல்வனின் பெயர் துஷ்ட கமனு. இவன் பொல்லாத வீரன். இலங்கையைத் திரும்பவும் ஏலேல சிங்கனிடமிருந்து கைப்பற்ற வேண்டுமென்று நெடுங்காலம் கனவு கண்டான். அவ்வீரன் சிறு பிள்ளையா யிருந்தபோது ஒரு நாள் படுக்கையில் கையையும் காலையும் மடக்கி ஒடுக்கி வைத்துக் கொண்டு படுத்திருந்தான். அவனுடைய அன்னை "குழந்தாய்! ஏன் இப்படி உன்னை நீயே குறுக்கிக் கொண்டு படுத்திருக்கிறாய்? தாராளமாய்க் காலையும் கையையும் நீட்டிவிட்டுப் படுத்துக் கொள்வதுதானே!" என்றாள். அப்போது துஷ்டகமனு "தாயே! என்னை ஒரு பக்கத்தில் தமிழ் வீரர்கள் நெருக்குகிறார்கள்; மற்றொரு பக்கத்

தில் கடல் நெருக்குகிறது. நான் என்ன செய்வேன்? அதனாலேயே உடம்பைக் குறுக்கிக் கொண்டு படுத்திருக்கிறேன்!'' என்றான். இத்தகைய வீரன் காளைப் பருவம் அடைந்தபோது படை திரட்டிக் கொண்டு ஏலேல சிங்கனுடன் போருக்குச் சென்றான். அவன் கொண்டு போன படைகள் சின்னாபின்னமாகிச் சிதறி ஓடிவிட்டன. அப்போது துஷ்டகமனு ஒரு யுக்தி செய்தான். ஏலேல சிங்கன் இருக்குமிடம் சென்று நேருக்கு நேர் நின்று ''அரசே! தங்களுடைய பெரிய சைன்யத்துக்கு முன்னால் என்னுடைய சிறிய படை சிதறி ஓடிவிட்டது. நான் ஒருவனே மிஞ்சியிருக்கிறேன். தாங்கள் சுத்த வீரர் குலத்தில் பிறந்தவர். ஆதலின் என்னுடன் தனித்து நின்று துவந்த யுத்தம் செய்யும்படி அழைக்கிறேன். நம்மில் வெற்றி அடைபவருக்கு இந்த இலங்கா ராஜ்யம் உரியதாகட்டும்; மற்றவருக்கு வீர சொர்க்கம் கிடைக்கட்டும்!'' என்று சொன்னான்.

துஷ்டகமனுவின் அத்தகைய துணிச்சலையும் வீரத்தையும் ஏலேல சிங்கன் மிக வியந்தான். ஆகையால் அவனுடன் தனித்து நின்று போர் செய்ய ஒப்புக்கொண்டான். இடையில் வந்து குறுக்கிட வேண்டாம் என்று தன் வீரர்களுக்குக் கண்டிப்பாகக் கட்டளையிட்டான். துவந்த யுத்தம் ஆரம்பமாயிற்று. இந்தச் செய்தியை அறிந்து சிதறி ஓடிய துஷ்டகமனுவின் வீரர்களும் திரும்பி வந்து சேர்ந்தார்கள். எல்லாரும் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தார்கள். நெடு நேரம் போர் நடந்தது. துஷ்டகமனுவோ தன்னுடைய பிறப்புரிமையைப் பெறும் பொருட்டு ஆத்திரத்துடன் சண்டையிட்டான். ஏலேல சிங்கன் அந்த இளைஞனிடம் அநுதாபம் கொண்டிருந்த படியால் பூரண வலிவையும் பிரயோகித்துப் போர் செய்யவில்லை. ஆகையால் முடிவில் ஏலேல சிங்கன் இறந்தான். துஷ்டகமனு முடி சூடியதும், ஏலேல சிங்கன் இறந்த இடத்தில் அவனுக்குப் பள்ளிப் படைக் கோயில் எழுப்பி அவனுடைய வீரத்தையும் தயாளத்தையும் போற்றினான்.

இந்த அரிய சரித்திர நிகழ்ச்சியைச் சோழ வீரர்கள் இளங்கோ அருள்வர்மரின் முன்னிலையில் நடனக் கூத்தாக நடித்துக் காட்டினார்கள். ஆடலும் பாடலும் அமர்க்களப் பட்டன. ஏலேல சிங்கன் உயிர் துறந்து விழுந்த இடத்தில் நடித்த வீரன் உண்மையிலேயே செத்து விழுந்து விட்டானா என்று தோன்றும்படி அவ்வளவு தத்ரூபமாக நடித்தார்கள். பார்த்துக் கொண்டிருந்த இளவரசரும் மற்ற வீரர்களும் அடிக்கடி 'ஆஹா'காரம் செய்து குதூகலித்தார்கள்.

நாடகம் நடந்து கொண்டிருந்தபோது ஒருமுறை இளவரசர் ஆழ்வார்க்கடியானைப் பார்த்து ''திருமலை! தம்பளை குகைக் கோயிலில் துஷ்டகமனுவுக்கும் ஏலேல சிங்கனுக்கும் நடந்த போர்க் காட்சியை அழியாத வர்ண சித்திரமாக வரைந்திருக்கிறதே, அந்தச் சித்திரத்தை நீங்கள் பார்த்ீர்களா?'' என்று கேட்டார்.

''இல்லை, ஐயா! தம்பளை வீதிகளில் நாங்கள் வந்து கொண்டிருந்தபோதே தங்களைப் பார்த்து விட்டேன். குகைக் கோயிலுக்குள் போக நேரமில்லை'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''ஆகா! அந்த குகைக் கோயில்களிலே உள்ள சிற்பங்களையும் அவசியம் பார்க்க வேண்டும்! திருமலை! நம் செந்தமிழ் நாட்டில் எவ்வளவோ சிற்ப சித்திரங்கள் இருக்கின்றன. அவற்றைக் காட்டிலும் மகத்தான அற்புதங்கள் இந்த இலங்கைத் தீவில் இருக்கின்றன!'' என்றார் இளவரசர்.

''இளவரசே! இந்த நாட்டிலுள்ள சிற்ப சித்திரங்கள் எங்கும் போய்விட மாட்டா! எப்போது வேணுமானாலும் பார்த்துக் கொள்ளலாம். ஆனால் தங்களைப் பார்ப்பது அப்படி யல்லவே? நல்ல சமயத்தில் நாங்கள் வந்ததினால் அல்லவோ பார்க்க முடிந்தது? எங்களுக்கு முன்னாலேயே இங்கு வந்த பார்த்திபேந்திர பல்லவன் தங்களைத் தேடிவிட்டு 'இங்கே இல்லை' என்று திரும்பிப் போய்க் கொண்டிருந்தான். வழியில் அவனை நாங்கள் பார்த்தோம்'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''ஆம்; என் தமையனாரின் அருமை நண்பர் வந்து தேடிவிட்டுப் போனதாக தளபதிகூடச் சொன்னார். அவர் எதற்காக வந்திருப்பார் என்று உன்னால் ஊகித்துச் சொல்ல முடியுமா?''

''நிச்சயமாகவே சொல்ல முடியும். தங்களைக் காஞ்சிக்கு அழைத்து வரும்

படியாக ஆதித்த கரிகாலர் அவரை அனுப்பி வைத்திருக்கிறார்."

"அடடே! உனக்குத் தெரிந்திருக்கிறதே! இதோ உன் சிநேகிதன் இவ்வளவு பத்திரமாகக் கொண்டு வந்து ஒப்புவித்தானே, இந்த ஓலையில் என்ன எழுதியிருக்கிறதென்றும், உனக்குத் தெரியும் போலிருக்கிறது?"

"தங்களை உடனே பழையாறைக்கு வந்து சேரும்படி தங்கள் தமக்கையார் எழுதியிருக்கிறார்கள். இளவரசே! குந்தவை தேவி அந்தரங்கமாக இந்த ஓலையை எழுதி நம் வாணர்குல வீரனிடம் கொடுத்தபோது பக்கத்திலிருந்த கொடி வீட்டில் மறைந்திருந்து நான் பார்த்துக் கொண்டிருந்தேன்......"

திருமலைக்குப் பின்னாலிருந்த வந்தியத்தேவன் அவனுடைய முதுகில் அழுத்தமாகக் கிள்ளினான்.

ஆழ்வார்க்கடியான் தன் முதுகில் ஓங்கி அறைந்து, "இது பொல்லாத காடு; இரவு நேரத்திலேகூட வண்டு கடிக்கிறது!" என்றான்.

இளவரசர் சற்றுக் கோபத்துடன் "சேச்சே! இது என்ன வேலை? என் அருமைத் தமக்கையார் பேரிலேயே நீ உன் திறமையைக் காட்டத் தொடங்கிவிட்டாயா?" என்றார்.

"அதை நான் பார்த்திருந்தபடியினால்தான் இவனை இவ்வளவு பத்திரமாக இங்கே கொண்டு வந்து சேர்த்தேன். இளவரசே! இவன் வழியிலெங்கும் சங்கடத்தில் மாட்டிக்கொள்ளாமல் காப்பாற்றிக் கொண்டு வருவதற்கு நான் பட்ட பாட்டைப் புத்த பகவானே அறிவார். அநுராதபுரத்தின் வழியாக வந்திருந்தால் இவன் நிச்சயமாக இங்கு வந்து சேர்ந்திருக்க மாட்டான். வழியில் யாருடனாவது சண்டை பிடித்துச் செத்திருப்பான். அதனாலே காட்டு வழியாக அழைத்து வந்தேன். அங்கேயும் இவன் ஒரு மத யானையுடன் சண்டை பிடிக்கப் பார்த்தான். என்னுடைய கைத்தடியால் அந்த மத யானையைச் சம்ஹாரித்து இவனைத் தங்களிடம் பத்திரமாய்க் கொண்டு வந்தேன்!" என்றான்.

"ஓஹோ! அப்படியானால் இவனைப் பத்திரமாகக் கொண்டு வந்து என்னிடம் சேர்ப்பதற்காகவே நீ இலங்கைக்கு வந்தாயா, என்ன?"

"இல்லை, ஐயா! என் பங்குக்கு நானும் தங்களுக்கு ஒரு செய்தி கொண்டு வந்திருக்கிறேன்."

"அது என்ன? சீக்கிரம் சொல்!" என்றார் இளவரசர்.

"முதன் மந்திரி அநிருத்தர் தாங்கள் இலங்கையிலேயே இன்னும் சிறிது காலம் இருப்பது உசிதம் என்று சொல்லி அனுப்பியிருக்கிறார்."

"இப்படி மூன்று மூத்தவர்கள் மூன்று விதமாகச் செய்தி அனுப்பினால் நான் எதையென்று கேட்பது?" என்றார் அருள்மொழிவர்மர்.

இச்சமயத்தில் வந்தியத்தேவன் குறுக்கிட்டு, "இளவரசே! மன்னிக்க வேண்டும்! தாங்கள் கேட்க வேண்டியது தங்கள் தமக்கையாரின் வார்த்தையைத்தான்!" என்றான்.

"ஏன் அவ்விதம் சொல்லுகிறீர்?"

"ஏனெனில், தங்கள் தமக்கையின் வார்த்தைக்கே மதிப்புக் கொடுக்க வேண்டும் என்று தங்கள் இருதயம் தங்களுக்குச் சொல்கிறது. அப்படித் தாங்கள் அவர் வார்த்தையைக் கேட்காவிட்டாலும், நான் கேட்டே தீர வேண்டும். தங்களை எப்படியும் அழைத்துக்கொண்டு வரும்படியாக இளைய பிராட்டி எனக்குப் பணித்திருக்கிறார்!" என்றான் வந்தியத்தேவன்.

இளவரசர் வந்தியத்தேவனை ஏற இறங்கப் பார்த்து விட்டு, "இத்தகைய ஒரு வீரத் தோழன் கிடைக்க வேண்டுமே யென்று எத்தனையோ நாளாக நான் தவம் செய்து கொண்டிருந்தேன்!" என்றார். (தொடரும்)

# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரஸ்வாமி

## 50. பிள்ளை வரம்

கருப்பத் தடைப் பிரசாரம் பலமாய் நடைபெறும் இந்த நாட்களில்கூட இந்தப் பிரசாரம் அவசியமா என்று தோன்றும். அதைப் பிள்ளையில்லாதவர்களிடம் கேட்டுப் பாருங்கள் தகுந்த பதில் கிடைக்கும். இதற்காக எவ்வளவு நோன்பு நோற்கின்றனர்! ராமேஸ்வர யாத்திரைகள் போகின்றனர்! தான தருமங்கள், யாகங்கள் செய்கின்றனர்! சிலருக்கு

என்ன செய்தும் ஒரு பலனும் கிடைக்கிறதில்லை. அவர்களுடைய ரத்தத்தில் சந்தானத்தை உற்பத்தி செய்யும் உயிரணுக்கள் இருந்தால் தானே! இவைகள் எல்லாம் செய்வதால் எங்காவது உயிரணுக்கள் உற்பத்தியாகப் போகின்றதா? விழலுக்கு இரைத்த நீர்தான்.

மலட்டுத்தனம் ஆண், பெண் இருவருக்கும் உண்டு. சிலர் குழந்தை யில்லை யென்று மற்றொரு கலியாணம் செய்து கொள்வர். கலியாணம் செய்து கொள்ளுவதற்கு முன் ஆணின் ரத்தத்தைச் சோதிக்க வேண்டும். அதில் ஜீவ அணுக்கள் இல்லையானால் சட்டப்படி இரண்டாவது கலியாணத்திற்கு அனுமதிக்கவே கூடாது. பெண்களைவிட ஆண்களுக்குத்தான் மலட்டுத்தனம் அதிகம்.

மலட்டுத்தனம் பல காரணங்களால் உண்டாகலாம். இயற்கையாய் அவர்கள் ரத்தத்தில் உயிர் அணுக்கள் இல்லாமல் இருக்கலாம். அல்லது பலவீனமாய் இருக்கலாம். சில மேக வியாதிகளால் பீடிக்கப்பட்டு உயிர் அணுக்கள் பலவீனப்பட்டு அழிந்து விடுவதும் உண்டு. பெண்களுக்கும் இதே காரணங்கள்தான். ஆனால் ஒரு சிலருக்கு கருப்பப் பையின் அமைப்பு சரியாய் இருக்காததினால் கரு தரிக்காது. அவர்கள் ஆபரேஷன் செய்து கொள்ள வேண்டியதுதான். மற்ற எந்தக் காரணமாய் இருந்தாலும் சர்வாங்காசனம் செய்தால் அவர்களுக்குக் கட்டாயம் குழந்தை பிறக்கும். தாதுவிற்கு உயிர் சக்தி அளிப்பது தைராய்ட் ரசம் தான். அக்குறையினால்தான் அவர்களுக்குச் சந்தானம் இல்லாமல் இருக்கிறது. சர்வாங்காசனம் செய்தால் தைராய்ட் ஹார்மோன் சரிவர வேலை செய்து உயிர் அணுக்களை உண்டாக்குகிறது. பிறகு குழந்தை பிறக்கும்.

**ஹிஸ்டிரியா:**—இது மிகவும் சிக்கலான அதிசயமான வியாதி. இரவில் எழுந்து இவர்கள் பல காரியங்களைச் செய்வர். மறுநாள் ஒன்றும் அவர்கள் செய்தது ஞாபகமிருக்காது. சிலருக்குப் புத்தி சுவாதீன மிருக்காது. இது ஆண்களை விடப் பெண்களுக்கு அதிகம் பிடிக்கிறது. சிலர் இதைப் பேய் பிடித்தது என்பர். மந்திரம் போடுவர். ஜாதகம் பார்ப்பர். கோவில் சுற்றுவர். தைராய்ட் கோளாறை இவைகள் எல்லாம் திருத்தவா போகின்றது! வயதான ஸ்திரீகளுக்கு வீட்டு விலக்கு நிற்கும்போது இது உண்டாவதுண்டு. எதிலும் ஒரு திகில் பயம், சந்தேகம் என்ன தான் சமாதானப் படுத்தினாலும் தேற மாட்டார்கள். தன்னை மீறி ஆத்திரம், கோபம் வரும். இவர்களை வைத்துக் குடும்பத்தில் சமாளிப்பது வெகு கஷ்டம். எந்த வயதினராய் இருந்தாலும் சரி, ஆண், பெண் யாரும் ஹிஸ்டிரியாவால் தாக்கப்பட்டவர்கள் சர்வாங்காசனம் செய்து குணம் ஆகலாம்.

**ஜுரங்கள்:**—ஜுரங்கள் பலவிதம் இருக்கின்றன. சாதாரண ஜுரம் முதல் வாயில் நுழையமுடியாத பெயருள்ள ஜுரங்கள் வரை இருக்கின்றன. எல்லா ஜுரங்களையும் சர்வாங்காசனம் தடுக்கக் கூடியது. சில ஜுரங்கள் வந்தால் அதன் அடையாளமாகச் சில குறைகளை உடலில் உண்டாக்கிச் செல்லும். டைபாயிடுக்கு அதன் குணம் உண்டு. சில ஜுரம் வேண்டாத விருந்தாளிபோல் அடிக்கடி வரும். 'மலேரியா' இதற்குப் பெயர் போனது. இதற்குக் குனைன் மாத்திரைகள், அதைவிட சக்தி வாய்ந்த கசப்புள்ள பாலுட்ரின் எல்லாம் விழுங்கப் படுகின்றன. இந்த வியாதி வரக் கூடாது. வந்தபின் என்ன செய்வது! விழுங்க வேண்டியதுதான் வேறு வழி; ஊசியும் குத்துகின்றனர். ஆனால் ஸ்திரமாய் வராமல் இருக்குமா என்றால், உறுதியான பதில் கிடைக்காது. சிலருக்கு இந்தக் கசப்பு மாத்திரைகள் கணக்கின்றி விழுங்கி, விழுங்கி இருதயக் கோளாறு வந்துவிடும். காது மந்தமாய் விடும், நரம்புகள் சருமங்கள் தளர்ந்து நிறம் மாறி விடும். சிலருக்கு வயிற்றில் மலேரியாக்கட்டி உண்டாய் விடும். மறுபடியும் அதைக் கரைக்க வேறு மருந்துகள்! மலேரியாக் கட்டி என்பது தனியாக ஒரு கட்டி உண்டாவதல்ல. ஸ்பிளீன் என்று ஒரு அவயவம் மிருதுவாய் இருக்க வேண்டியது கட்டி போல் கெட்டியாய் வீங்கிவிடும். சாப்பிடும் மருந்து கட்டியை மட்டுமா கரைக்கும்! உடலையும் கரைத்தால் கேட்பார் யார்! இவர்கள் படும் அவஸ்தை இவர்களுக்கல்லவா தெரியும். இவர்களும் சர்வாங்காசனம் செய்தால் கட்டி கரையும். இனிமேல் மலேரியாவே வராமல் தடுக்கும். மற்றும் என்னென்ன ஜுரங்கள் உண்டோ அத்தனையும் தடுக்க வல்லது சர்வாங்காசனம். அத்துடன் "ப்ளூரஸி" போன்ற வியாதிகளையும் போக்கவல்லது.

**குடல் பிதுக்கம்:**—சிறு குடலின் மேல் பையைப் போல் ஒருவித சவ்வால் பின்னப்பட்டிருக்கும். எந்தக் காரணத்தினாலோ அந்த சவ்வில் துளை ஏற்படுகிறது. அப்பொழுது சிறு குடலின் ஒரு சிறு அளவு அதன் வழியே பிதுங்கி விடுகிறது. சிலருக்கு மர்மஸ்தானத்தின் மேல் இருக்கும் சவ்வில் துளை ஏற்பட்டும் கீழே இறங்கிவிடும். இதற்குப் பலவித பெல்ட்டுகள் விற்கின்றன. அதை அந்தக் குடல் பிதுங்கின ஸ்தானத்தில் வைத்து அமுக்கி பெல்ட் அணிவர். இவர்களுக்கு மலச்சிக்கல் உண்டாகாத வரை ஒரு கஷ்டமும் கிடையாது. இவர்கள் ஆகாரம் வெகு ஒழுங்காய்ச் சாப்பிட வேண்டும். அப்படி இல்லாவிட்டால், பிதுங்கின குடல்களில் அந்த ஆகாரத் துண்டுகள் சென்று அழுகும். அப்பொழுது வீங்கிவிடும். சீழும் பிடிக்கும். வலி பொறுக்க முடியாது. அந்தச் சமயம் பிதுங்கின குடலை உள்ளே தள்ள முடியாது. அதுதான் வீங்கிவிட்டதே! எப்படி உள்ளே போகும்! உடனே ஆபரேஷன் செய்ய வேண்டும். இல்லையானால் உயிருக்கு ஆபத்துதான். ஆனால் ஆபரேஷன் செய்யாமல் சர்வாங்காசனம் செய்தால் குணமாகும். ஆனால் குடல் பிதுக்கத்தைப் போக்க முடியாது. பெல்ட்டை உபயோகிக்க வேண்டியதே.

மற்றும் வலிப்புகளில் பல திணுசுகள் உண்டு. காக்காய் வலிப்பு முதற் கொண்டு சகல வலிப்புகளையும் இந்த சர்வாங்க ஆசனத்தைச் செய்து சுகப்படுத்திக் கொள்ளலாம்.

சர்வாங்காசன மகிமைக்கு ஒரு முடிவே கிடையாது. எவ்வளவு வேண்டு மானாலும் சொல்லிக் கொண்டே போகலாம். எந்த ஆசனமும் செய்ய முடியாதவர்கள் இந்த ஒரு ஆசனத்தை மட்டும் செய்தால் போதும். ஆரோக்கியமாக வாழலாம். (தொடரும்)



# பயங்கொள்ளியின் வழி

பரிசுக் கதை

ஆர். வேணுகோபால் ரெட்டி

மூலக் கதை — ஆங்கிலம்      மொழிபெயர்ப்பு — 'வாஞ்சி'

நாங்கள் பற்பல விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். அப்போது மனோ தைரியத்தைப் பற்றியும் பிரஸ்தாபம் எழுந்தது. யாரோ ஒருவர் அவ்விஷயமாகப் பேச ஆரம்பித்தார்.

தன்னைப் பற்றித் தம்பட்டம் அடித்துக் கொள்ளும் சந்தர்ப்பத்தை எங்கள் நண்பரான மேஜர் ஒரு போதும் கைவிடுவதில்லை. அவர் தம்முடைய வீரப் பிரதாபங்களைப் பற்றிய கதைகளைச் சொல்லிச் சொல்லி எங்கள் காதுகள் புளித்து விட்டன. இருந்தாலும் சொன்னதையே திரும்பத் திரும்பச் சொல்லி அவர் எங்களைக் கஷ்டப் படுத்தாமல் இருப்பதில்லை. அப்படிப் பட்டவருக்குத் தைரியத்தைப் பற்றிப் பேசச் சந்தர்ப்பம் கிடைத்தால் இலகுவிலே விடுவாரா!

மேஜரின் கதைகளைக் கேட்டு நாங்கள் அலுத்துப் போயிருந்தாலும், அவரைக் குறுக்கிட்டுத் தடுக்க எங்களில் யாருக்கும் துணிச்சல் உண்டாகவில்லை. நல்ல வேளையாக இச்சந்தர்ப்பத்தில் ஒருவருக்கு அவ்விதத் துணிச்சல் ஏற்பட்டது.

எப்போதும் யார் சொல்லும் கதையையும் சாந்தமாகக் கேட்கும் சுபாவம் உள்ள டாக்டர் அன்று மேஜரைக் குறுக்கிட்டுப் பேசியது எங்களுக்கு ஆச்சரியமாக இருந்தது. மேஜரும் திகைத்துப் போனார்.

"மேஜர் மிக ரசமான சம்பவத்தைப் பற்றி விவரிக்கப் போகும் சமயத்தில் நான் குறுக்கிட நேர்ந்ததற்காக வருந்துகிறேன். இருந்தாலும் தைரியத்தைப் பற்றியும் வீரத்தைப் பற்றியும் யார் தடபுடலாகப் பேசினாலும் பொறுமையுடன் கேட்டுக் கொண்டிருக்க என்னால் முடியவில்லை. ஏனென்றால் இந்த உலகத்திலே முற்றிலும் தைரியசாலி என்று ஒருவரையும் கூறமுடியாது. மகா தைரியசாலி என்று பெயர் பெற்றவர் ஆபத்தான சமயத்தில் மகா கோழையாக நடந்து கொண்டதை நான் பார்த்திருக்கிறேன். கோழை நெருக்கடியான சமயத்தில் தைரியத்துடன் உயிரைத் தியாகம் செய்ததும் உண்டு" என்ற பூர்வ பீடிகையுடன் டாக்டர் ஆரம்பித்தார்.

"எனக்கு நேர்ந்த அநுபவம் ஒன்றை நான் சொல்ல விரும்புகிறேன்" என்று கூறி அவர் சில வருஷங்களுக்கு முன் நிகழ்ந்த ஒரு சம்பவத்தை விவரிக்கத் தொடங்கினார்:

நாஸ் என்ற பெயருள்ள ஒருவரைப் பற்றியே நான் இப்போது உங்களுக்குச் சொல்லப் போகிறேன். ஒரு நாள் அவர் என்னைப் பார்க்க வந்திருந்தார். அவர் தம்முடன் நாலு வயதான தம் மகனையும் அழைத்து வந்தார்.

நாஸ் வாட்டசாட்டமான மனிதர். அவரைப் பார்த்தால் ஒரு பயில்வான் போல் இருந்தது. அவர் திடமாகவும் ஆரோக்கியமாகவும் இருந்ததால், 'இந்த மனிதர் ஏன் நம்மைப் பார்க்க வந்திருக்கிறார்!' என்று நான் ஆச்சரியப் பட்டேன்.

உடனே பக்கத்தில் நின்று கொண்டிருந்த அவரது பையனைப் பார்த்தேன். அவனும் பூரண ஆரோக்கியத்துடன் இருந்தான்.

இச்சந்தர்ப்பத்தில்தான் நான் நாஸின் முகத்தை உற்றுப் பார்த்தேன். அதன் தோற்றம் விசித்திரமாக இருந்தது. முகத்தில் உள்ள உறுப்புக்கள் எல்லாம் சாதாரணமாக எல்லோருக்கும் இருப்பது போலவே காணப் பட்டன. ஆனால் அந்த முகத்தில் தோன்றிய உணர்ச்சிகள்தான் என்னைத் திடுக்கிடச் செய்தன.

அவர் முகத்தில் ஏதோ ஒருவித பீதி குடி கொண்டிருந்தது. கண்களுக்குக் கீழே துன்பத்தின் அறிகுறிகளான கருப்பு ரேகைகள் படர்ந்திருந்தன. நெற்றியிலும் கடைவாய்ப் பக்கங்களிலும் வயோதிகரைப் போல் சுருக்கங்கள் விழுந்திருந்தன.

இவையெல்லாவற்றையும் காட்டிலும் அவருடைய கண்களே என் கவனத்தை இழுத்தன. அவை நிலையற்று அங்குமிங்கும் பார்த்துக் கொண்டிருந்தன. எந்த நிமிஷத்திலும் ஏதோ

கோரமான காட்சி ஏற்படுவதை எதிர்பார்த்துக் கொண்டிருப்பது போல் அவரது கண்கள் தோன்றின. அதாவது பலியிடுவதற்காக இழுத்துச் செல்லப்படும் ஆட்டின் கண்களைப் போல் தாயின் கண்கள் பார்க்கப் பரிதாபமாக இருந்தன.

இவ்விவரங்களை யெல்லாம் நான் ஒன்றிரண்டு நிமிஷங்களில் பார்த்துத் தெரிந்து கொண்டு விட்டேன். அவர் தாமாக ஏதாவது சொல்லுவாரோ என்று அவரது முகத்தைப் பார்த்தேன். ஆனால் அப்போது அவர் கீழே தரையைப் பார்த்துக் கொண்டிருந்தார். சொல்ல விரும்பியதைச் சொல்ல மனம் வராமல் தயங்கிக் கொண்டிருந்தார்.

இந்த நிலைமையை எவ்வளவு நேரம் நீடிக்க விடுவது! ''எதற்காக என்னைப் பார்க்க வந்தீர்கள்!'' என்று சற்றுப் பொறுமையிழந்தவனாய் அவரைக் கேட்டேன்.

அவருக்குத் தொண்டை அடைத்துக் கொண்டது. கடைசியில் பேச ஆரம்பித்தார்.

அவரது குரலைக் கேட்டதும் நான் திடுக்கிட்டுப் போனேன். அவருடைய காத்திரத்துக்குத் தகுந்தவாறு குரல் கம்பீரமாக இல்லை. கீச்சுக் குரலாக இருந்தது. ஒரு பெண் பேசுவதுபோல் இருந்தது.

''என்னையும் என் பிள்ளையான இவனையும் பற்றி உங்களுடன் கலந்து பேசவே நான் இங்கு வந்திருக்கிறேன். நான் பிறவியிலேயே கோழை. என்னைப்போல் வெறுக்கத்தக்க கோழை இந்த உலகத்திலேயே இருக்கமாட்டார்கள்'' என்றார் தாய்.

அவரது வார்த்தைகள் என்னைத் திடுக்கிடச் செய்தன. அவர் கூறியதை என்னால் நம்பவே முடியவில்லை.

''என்ன! நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்!'' என்று அவரைக் குறுக்கிட்டேன்.

அவர் பரிதாபகரமான வறட்டுச் சிரிப்பொன்று சிரித்தார்.

''ஆமாம் டாக்டர். நான் பிறவியிலேயே கோழை. எனினும் என் தேகத்தைப் பார்த்தால் என்னைக் கோழை என்று யாரும் சொல்ல முடியாதுதான். நான் குழந்தைப் பருவத்திலிருந்து இழிவான கோழையாக இருந்து வந்திருக்கிறேன். இருளிலே செல்ல நான் நடுங்குவேன். இடி, மின்னலைக் கண்டு நான் பயப்படும் போது எங்கு இறந்து விடுவேனோ என்று பிறருக்குத் தோன்றும். யாராவது முரடனாக இருப்பவன் என் கண்ணில் தென்பட்டால் நான் ஓடி ஒளிந்து கொள்வேன். பழகின பூனைகள், நாய்கள்கூட என்னைத் திகில் கொள்ளச் செய்யும்.



''என் வயதுள்ள சிறுவர்கள் சண்டையிடுவதைப் பார்த்தால் பயந்து விடுவேன். பயம் காரணமாக நான் எந்தப் பையனுடனும் சண்டை போடமாட்டேன்; இரத்தத்தையோ அல்லது யாராவது வலியினால் கஷ்டப்படுவதையோ பார்த்தால் அன்றிரவு முழுவதும் என் கண்முன் பயங்கரக் காட்சிகள் தோன்றிக் கொண்டிருக்கும்.

''வயது ஆக ஆக நான், என் கோழைத்தனத்தையும் பீதியையும் உதறித் தள்ள எவ்வளவோ முயன்றேன். கோழையாக இருப்பது எவ்வளவு பயங்கரமானது என்பதை நான் அறியாமல் இல்லை. எந்த மனிதனுடைய முகத்தையும் நேருக்கு நேராகத் தைரியமாகப் பார்க்கும் சக்தி எனக்கு இல்லை.

''இழிவான, பயங்கரமான சேற்றிலிருந்து, அதாவது கோழைத்தனத்திலிருந்து தலை தூக்க நான் படாதபாடு பட்டேன். கடைசியில் கொஞ்சம் கொஞ்சமாக என் வாழ்வையே சீர்குலைத்து வந்த பயத்தைச் சிறிதளவு போக்கிக் கொள்ள முடிந்தது.

''பிறகு நான் கல்யாணம் செய்து கொண்டேன். என் மனைவி நல்ல பெண். சாதாரணமாக மற்றப் பெண்களைப்போலத் தைரியசாலியாகவும் இருந்தாள். கோழையான என் விஷயத்தில் அவள் அனுதாபம் கொண்டு, என்னை உற்சாகப்படுத்தினாள். நான் கோழை என்று என்னை நானே இழிவுபடுத்திக் கொள்வதாகவும், உண்மையில் நான் தைரியத்தில் மற்றவர்களுக்கு எவ்விதத்திலும் குறைந்தவன் அல்ல என்றும் ஆறுதல் கூறினாள். நான் மிகவும் சந்தோஷமாக இருக்கும்படி அவள் செய்ததுடன், எனக்கு உள்ள பீதியை மறக்கவும் உதவியாக இருந்தாள். எனவே நான் ஒரு புது மனிதன் ஆகிவிட்டேன் என்ற உணர்ச்சி எனக்கு ஏற்பட்டது.

''அப்போதுதான் ஒரு நாள் திடுக்கிடத் தக்க உண்மை வெளியாயிற்று. ஒருநாள் மாலையில் நான் என் மகனை அழைத்துக் கொண்டு வெளியில் உலவி வருவதற்காகச் சென்றேன். நான் திரும்பி வந்தபோது வீடெல்லாம் ஒரு நாளும் இல்லாதவாறு சந்தடியின்றி இருந்தது. அதைக் கண்டு கலக்கம் அடைந்த நான் உள்ளே சென்றேன்.

''வீட்டில் இருந்த மூன்று வேலைக்காரர்களில் ஒருவர் கூட அப்போது வீட்டில் இல்லை. என் மனைவி படுக்கையில் படுத்துக் கொண்டிருந்தாள். அவள் தூங்குவதாக நினைத்து அருகில் சென்றேன் அவளை எழுப்ப முயற்சித்த போதுதான் அவள் தூங்கவில்லை என்பதும், மூர்ச்சையடைந்திருக்கிறாள் என்பதும் எனக்குத் தெரிய வந்தது. அவள் முகம் வெளுத்

இருந்தது. இலையடைந்து நான் டாக்டருக்கு 'டெலிபோன்' செய்தேன்.

"டாக்டர் வந்து அவளைப் பரிசோதனை செய்தார். அவரது முகம் கலக்கத்தைக் காட்டியது. அவர் என்னை வெளியே அழைத்துச் சென்றார். என் மகனையும் வெளியே வரும்படி கூறினார்.

'உங்கள் மனைவிக்கு 'பிளேக்' நோய் கண்டிருக்கிறது. நான் என்னால் இயன்றதைச் செய்து விட்டேன். அவள் பிழைத்தால் புனர் ஜன்மம் தான். ஆனால் உங்கள் பையனை மாத்திரம் அவள் அருகில் செல்லாமல் பார்த்துக் கொள்ளுங்கள். இது கோரமான தொத்து நோய் அல்லவா!' என்றார் டாக்டர்.

"டாக்டர் சொன்னதைக் கேட்டதும் நான் அடைந்த திகில் சொல்லி முடியாது. எனக்கு உலகமே சுழல்வது போலிருந்தது. டாக்டர் என் முதுகைத் தட்டி ஆறுதல் கூறிச் சென்று விட்டார்.

"என் மனைவிக்கு 'பிளேக்' நோய் என்பதைக் கேட்டதும் உலகமே நிரந்தரமாக அஸ்தமித்து விட்டது போல் எனக்குத் தோன்றியது. நான் அறைக்குள் சென்று அவளைப் பார்க்க விரும்பினேன். எனினும் பயத்தினால் எனக்கு அவள் அருகில் செல்ல முடியவில்லை. அறைக்கு வெளியில் தூரத்திலிருந்தே அவளைப் பார்த்தேன். அவள் கழுத்தில் வீக்கம் இருந்தது எனக்குத் தெரிந்தது.

"அதிலிருந்து என்னைத் திகில் ஆட்கொண்டது. என் கோழைத்தனம் பன் மடங்கு அதிகமாகியது. என்னையும் எங்கு பிளேக் பற்றிக் கொண்டு விடுமோ என்று நினைத்தேன். என் மகனை அழைத்துக் கொண்டு ஓடினேன், கண் மூடித்தனமாக வெறி பிடித்தவனைப் போல் ஓடினேன்.

"அன்றிரவு நான் ஒரு ஹோட்டலில் தங்கினேன். பல் வேறு உணர்ச்சிகள் எனக்குச் சொல்லொணா வேதனையைக் கொடுத்தன. மனைவியின் பக்கத்திலே இருக்க வேண்டிய சமயத்தில் கோழைத்தனத்தினால் நான் அவளைக் கைவிட்டு வந்ததைக் குறித்து என்னவெல்லாமோ நினைத்தேன்.

"மறுநாள் பொழுது விடிந்து என் மகன் படுக்கையை விட்டு எழுந்திருந்த உடனே தன் தாயார் எங்கே என்றுதான் கேட்டான். அதைக் கேட்டதும் என் மனச்சாட்சி என்னைத் துன்புறுத்தியது. நான் மிகவும் கஷ்டப் பட்டுத் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு என் மனைவியைப் போய்ப் பார்க்கத் தீர்மானித்தேன். ஆனால் நான் வீடு போய்ச் சேருவதற்கு முன்பே முதல் நாள் இரவு என் மனைவி இறந்து விட்டதாகச் சொன்னார்கள்.

* * *

"என் மனைவி இறந்து இரண்டு மாதங்கள் ஆகின்றன. வெட்கத்தினாலும் வியாகூலத்தினாலும் இதுவரையில் நான் வீட்டை விட்டு வெளியே கிளம்பவில்லை. ஆனால் நேற்று முதல் பயங்கரமான ஓர் எண்ணம் என்னை வாட்ட ஆரம்பித்திருக்கிறது. என் கோழைத்தனம் என் மகனுக்கும் ஏற்பட்டுவிடுமாயின் அவன் கதி என்ன ஆவது! அதனால்



பையன்:—அப்பா, கடவுள் ரொம்பப் புத்திசாலி அப்பா!

அப்பா:—ஏன்?

பையன்:—மூக்குக் கண்ணாடியைக் கண்டு பிடிப்பதற்குப் பல ஆயிரம் வருஷங்களுக்கு முன்னாலேயே அதை மாட்டுவதற்குக் காதைக் கண்டு பிடித்து விட்டாரல்லவா?

தான் நான் உங்களைப் பார்க்க வந்திருக்கிறேன். நீங்கள் இனி கோழைத்தனத்திலிருந்து என்னைக் காப்பாற்ற முடியாது. ஆனால் என் மகனையாவது காப்பாற்ற முடியும் என்ற எண்ணத்துடனேயே உங்களை நாடி வந்திருக்கிறேன்.

"கோழையான இந்தப் பாவியின் கதை இது தான், டாக்டர்!"

தான் தமது வரலாற்றை முடித்ததும் அவருக்கு வந்த அழுகையை அடக்கிக் கொண்டார். அவர் தம்மைத் தாமே வெறுத்துக் கொண்டார். அவர் சகிக்க முடியாத மனோ வேதனையால் கஷ்டப்படுகிறார் என்பது நன்கு தெரிந்தது. அவர் சரீரமும் மனமும் உடையும் தறுவாயில் இருந்தன.

என்னால் இயன்றவரையில் அவருக்கு நான் ஆறுதல் கூறினேன். அவர் கோழையாக இருந்தால், அவருடைய மகனும் கோழையாக இருப்பான் என்று நினைப்பதற்கு ஆதாரம் எதுவும் இல்லையென்று சொன்னேன். சரியான பயிற்சி அளிக்கும் பட்சத்தில் அவரது பையன் மகா தைரியசாலியாக விளங்குவான் என்றும் உறுதி கூறினேன்.

குழந்தைகள் எதிர்காலத்தில் கோழையாக இருப்பதற்கு அநேக காரணங்கள் உண்டு. இருட்டில் பூச்சாண்டி இருப்பதாகக் குழந்தைகளைப் பயமுறுத்தக் கூடாது. முகம் தெரியாத அன்னியர்கள் குழந்தைகளைப் பிடித்துக் கொண்டு போவதற்காகத்தான் வந்திருக்கிறார்கள் என்று சொல்லக் கூடாது. குழந்தைகளுக்கு எல்லை மீறிச் செல்லம் கொடுக்கக் கூடாது. அவர்கள் எங்கேயாவது போய் விடுவார்களோ, அவர்களுக்கு ஏதாவது ஆபத்து நேர்ந்து விடுமோ என்று எண்ணி, அவர்களை எப்போதும் கண்காணித்துக் கொண்டிருக்கக் கூடாது. இத்தகைய காரியங்கள் தான் குழந்தைகளின் தைரியத்தைக் கெடுத்து அவர்களைக் கோழையாகச் செய்து விடுகின்றன.—இவ் விவரங்களை யெல்லாம் எனக்குத் தெரிந்த அளவு நான் தலைவருக்கு எடுத்துச் சொன்னேன்.

அவரது பையனை அடிக்கடி அழைத்து வந்து என்னிடம் காட்டும்படியும் அவருக்குக் கூறினேன். அவ்விதம் காட்டினால் நான் அவனது மனோ நிலையை அடிக்கடி கவனித்துத் தகுந்த பரிகார முறைகளைக் கூறலாம் அல்லவா!

எனது யோசனைக்கு இணங்க தாஸ் அப்போதைக்கப்போது தம்முடைய மகனை அழைத்துக் கொண்டு வந்து என்னிடம் காட்டினார்.

ஒரு நாள் இரவு நான் தூங்கிக் கொண்டிருக்கையில் யாரோ டெலிபோனில் கூப்பிட்டார்கள்.

"ஹல்லோ! டாக்டர் நாத் அவர்களா பேசுவது! சர்க்கார் ஆஸ்பத்திரியிலிருந்து பேசுகிறோம். இங்கு சிகிச்சை பெற வந்திருக்கும் தாஸ் என்ற பெயருள்ள ஒருவர் உடனே உங்களைப் பார்க்க வேண்டும் என்கிறார்" என்று டெலிபோனில் சொன்னார்கள்.

அதைக் கேட்டதும் நான் விழுந்தடித்துக் கொண்டு ஆஸ்பத்திரிக்குச் சென்றேன். தாஸ் ஏன் ஆஸ்பத்திரியில் இருக்கிறார்! அவர் ஏன் என்னைப் பார்க்க வேண்டும்! என்பது பற்றி என்னால் எதுவும் ஊகிக்க முடியவில்லை.

நான் சர்க்கார் ஆஸ்பத்திரிக்குச் சென்றதும் அங்கிருந்த டாக்டர் "நீங்கள் தாஸ் என்பவரைப் பார்த்துப் பேசுவதற்கு முன் நான் உங்களிடம் பேச விரும்புகிறேன். அதிர்ச்சியினால் அவரது மனம் இப்போது சரியான நிலையில் இல்லை. அவரும் அவரது மகனும் கடைத் தெருவைக் கடந்து சென்று கொண்டிருந்தார்கள் என்று தோன்றுகிறது. பையன் ரஸ்தாவின் நடுவில் வந்தான். அப்போது அவன் அருகில், ஒரு மோட்டார் வந்துவிட்டது. தாஸ் அவனுக்குப் பின் சில அடி தூரத்தில் வந்து கொண்டிருந்தார். அவருக்குச் சிறிதளவு தைரியமோ, முன் யோசனையோ இருந்திருக்குமாயின் அவர் அந்தப் பையனை இப்பால் இழுத்து அவனைக் காப்பாற்றியிருக்கலாம். ஆனால் இந்தப் பாழும் மனிதர் திகைத்துப் போய் அப்படியே நின்று விட்டார். பையன் மீது மோட்டார் ஏறி, அவன் அந்த இடத்திலேயே இறந்து போனான். தன் கண் முன் தன் குழந்தை இறந்ததைப் பார்த்த இவர் அங்கேயே மூர்ச்சையடைந்து விழுந்து விட்டார். உடனே அவரை யாரோ இங்கே கொண்டு வந்தார்கள். அரை மணி நேரத்துக்கு முன் தான் அவருக்குப் பிரக்ஞை வந்தது. அதிலிருந்து அவர் உங்களைப் பார்க்க வேண்டும் என்று அப்போதைக்கப்போது சொல்வதைத் தவிர, மற்றப்படி கூக்குரலிட்டுக் கொண்டும் விம்மி அழுது கொண்டும் இருக்கிறார். ஒரு கோழை யென்றும் கொலைகாரன் என்றும் தம்மைத் தாமே வெறுத்துக் கொள்கிறார். அவரை உங்களுக்குத் தெரியுமா!" என்று சொல்லி முடித்தார் ஆஸ்பத்திரி டாக்டர்.

நான் அவருக்கு தாஸின் வரலாற்றைக் கூறிவிட்டு தாஸைப் பார்ப்பதற்காகச் சென்றேன்.

தாஸ் அப்போது இருந்த நிலை ஒரு பயங்கரமான காட்சியாக இருந்தது. அப்போது கூட அவர் உரக்கக் கதறிக் கொண்டும் விம்மிக் கொண்டும் இருந்தார். என்னைப் பார்த்ததும் அவர் நெஞ்சே வெடித்துவிடும்போல் கதறினார். அப்படியே சிறிது நேரம் மூர்ச்சையாகி விட்டார்.

அவரது வாழ்க்கையே முடிந்துவிட்டது போல் தோன்றியது. இனி அவர் எதற்காக இந்த உலகில் இருக்க வேண்டும்!



கிராமங்களில் கண் இழந்தவர்களுக்கும் கண் நோயுற்றவர்களுக்கும் சிறந்த வைத்திய உதவி புரிந்துவரும் இந்தியச் செஞ்சிலுவைச் சங்கத்தின் திருச்சிக் கிளை ஸ்தாபனம் ரூ. 45,000 வசூலித்து வைத்திய உதவிகள் எடுத்துச் செல்லக் கூடிய இந்த விசேஷ மோட்டாரை நிர்மாணித்துச் சங்கத்துக்கு வழங்கியிருக்கிறது. செஞ்சிலுவைச் சங்கத்தின் காரியதரிசி டாக்டர் பி. ஏ. என். ராகவன் அந்த வண்டியை ஏற்றுக் கொள்வதைப் படத்தில் காணலாம்.

அவரை நான் அழைத்துச் சென்று என்னுடன் இருக்கும்படி வற்புறுத்தினேன். அவரைச் சரியாகப் பராமரிக்கா விட்டால் அவருக்கு பயங்கரமான ஆபத்து ஏதாவது நேரலாம் என்று தோன்றியது.

அவருக்கு நேர்ந்த துக்கத்தைப் போக்கி அவருக்குச் சிறிதளவாவது தைரியமும் ஆறுதலும் ஏற்பட நான் என்னால் இயன்றதைச் செய்தேன். ஆனால் என் முயற்சி பலனைக் கொடுப்பதாகத் தோன்றவில்லை. அவர் எப்போதும் தமது மனைவியையும் மகனையும் தமது பயங்கொள்ளித் தனத்தையும் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தார். அவர் மனத்திலிருந்து அத்தகைய சிந்தனையைக் களைந்தாலன்றி, அவரது மூளையே கலங்கிப் பைத்தியம் பிடித்து விடுமென்று பயந்தேன்.

ஒருநாள் அவரை நீண்ட தூரம் உலாவிவிட்டு வருவதற்காக அழைத்துச் சென்றேன். அவர் என்னுடன் வந்தார். இருந்தாலும் அவரது மனம் என்ன பாடு படுகிறது என்பதை நான் அறிந்து கொள்ளாமல் இல்லை. உலகத்திலே உண்மையில் ஒரு மனிதனும் தைரியசாலியல்ல

என்பதை நிரூபிப்பதற்காக நான் அவருக்குப் பல கதைகளைக் கூறினேன்.

நாங்கள் வீட்டுக்குத் திரும்பிச் செல்ல ஆரம்பித்தபோது அஸ்தமித்து விட்டது. ரயில் பாதையின் வழியாக நாங்கள் சென்று கொண்டிருந்தோம். திடீரென்று எங்கள் சிந்தனைகள் கலைந்தன. சிறிது தூரத்தில் பிரமாதமான சப்தத்துடன் ரயில் வண்டி வந்து கொண்டிருந்ததே அதற்குக் காரணம். அங்கு பாதை வளைந்திருந்ததால், சப்தம் மாத்திரம் கேட்டதே யன்றி ரயில் வண்டியை நாங்கள் பார்க்க முடியவில்லை.

தாஸ் அந்தச் சப்தத்தைக் கேட்டதும் துள்ளிக் குதித்து அப்பால் ஓடிவிட்டார். நான் மாத்திரம் ரயில் பாதைக்கு அருகில் பயமின்றி அமைதியாகச் சென்று கொண்டிருந்தேன்.

ரயில் வண்டி அந்த வளைவில் திரும்பியதும் அதன் முன்புறத்திலிருந்த விளக்கு வெளிச்சத்தினால் இருள் அகன்று எங்கும் பகல்போல் பிரகாசமாக இருந்தது.

அடாடா! அப்போது நான் கண்ட காட்சி என்னைப் பயத்தினால் நடுங்கும்படி செய்து விட்டது. நாங்கள் இருந்த இடத்திலிருந்து சுமார் இருபது கெஜ தூரத்தில் ரயில்பாதையின்மீது ஒரு பெண்ணும் குழந்தையும் படுத்துக் கொண்டிருந்தார்கள். அந்தப் பெண் பிரக்ஞையற்றவள் போல் கிடந்தாள். குழந்தையோ அவளை இறுகப் பிடித்துக்கொண்டு அலறிக் கொண்டிருந்தது.

நான் தைரியத்தில் யாருக்கும் குறைந்தவனல்ல. பயம் என்பதற்கும் என் தொழிலுக்கும் வெகு தூரம் அல்லவா! அப்படியிருந்தும் மேற்படி காட்சியைக் கண்டதும் அப்படியே பிரமித்து நின்றுவிட்டேன். அப்போது எனக்கு என்ன செய்வதென்றே தோன்றவில்லை.

அந்தப் பெண்ணையும் குழந்தையையும் காப்பாற்றுவது முடியாத காரியம் என்று எனக்குத் தோன்றியது. அந்த விநாடியில் நேரப்போகும் அந்தக் கோரச் சம்பவத்தைப் பார்க்க வேண்டாம் என்பதற்காக நான் என் கண்களை இறுக மூடிக்கொண்டேன்.

அப்போது என் அருகில் யாரோ ஓடும் சப்தம் கேட்டது. நான் உடனே கண்களைத் திறந்து பார்த்தேன். பெண்ணும் குழந்தையும் கிடந்த இடத்தை நோக்கி தாஸ் மின்னல் வேகத்தில் ஓடினார்.

அவ்வமயம் என் கண்களையே என்னால் நம்ப முடியவில்லை. நான் கண்களைத் துடைத்துக் கொண்டு பார்த்தேன்.

அவர்களுக்கு அருகில் ரயில் வண்டி வந்து விட்டது. அதே சமயம் தாஸ் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து அந்தப் பெண்ணையும் குழந்தையையும் பாதைக்கு அப்பால் இழுத்துத் தள்ளி விட்டார்.

அதைப் பார்த்ததும் நான் மறுபடியும் கண்களை மூடிக் கொண்டேன்.

ரயில் வண்டி ஏறி தாஸின் இரண்டு கால்களும் நொறுங்கி விட்டன. அவர் இன்னும் சில நிமிஷங்களில் இறந்து விடுவார் என்பதைத் தெரிந்து கொண்டேன்.

ரயில் வண்டி நின்றது. வண்டியில் இருந்த பிரயாணிகள் யாவரும் கீழே இறங்கி எங்களைச் சூழ்ந்து கொண்டார்கள்.



"கறுப்புப் பூனை குறுக்கே ஓடினால் அது நல்லதா, கெட்டதா?"
"அது நீ மனிதனா, சுண்டெலியா என்பதைப் பொறுத்தது!"

தாஸ் கண்களைத் திறந்து என்னைப் பார்த்தார். "பிராயச் சித்தம் செய்து விட்டேன் டாக்டர்! பயங்கொள்ளித் தனத்தினால் நான் செய்த பாவங்களுக்குப் பிராயச்சித்தம் செய்து விட்டேன்!" என்று ஈனக்குரலில் கூறினார்.

"ஆம்" என்பதற் கறிகுறியாக நான் தலையை அசைத்தேன்.

"அந்தப் பெண்ணும் குழந்தையும் என் தண்டவாளத்தின் மீது படுத்துக் கொண்டிருந்தார்கள், டாக்டர்!" என்றார் தாஸ். அவரால் பேச முடியவில்லை.

"பட்டினி கிடந்து துன்பப் படுவதைக் காட்டிலும் தற்கொலை செய்து கொள்வது மேல் என்று அவள் கருதி யிருக்க வேண்டும்" என்றேன்.

"என்னிடம் உள்ள பணத்தை யெல்லாம் அவளுக்குக் கொடுத்து விடுங்கள்" என்று கேட்டுக் கொண்டார் தாஸ்.

அப்படியே செய்வதாகச் சொன்னேன்.

"நான் இனிப் பிழைக்கமாட்டேன். இல்லையா, டாக்டர்!" என்றார்.

அவர் முகத்தில் புன்முறுவல் தவழ்ந்தது. அதுவரையில் அவர் முகத்தில் குடிகொண்டிருந்த பேய்க்களையும் பீதியும் மறைந்தன.

"டாக்டர், நான் நிம்மதியாகக் கண்ணை மூடுகிறேன். என் பாவத்தைக் களைந்து விட்டு நான் கடவுளின் பாதத்தை அடைகிறேன். உங்களுக்கு வந்தனம்" என்றார் தாஸ். அவர் வாயிலிருந்து வெளிவந்த கடைசி வார்த்தைகள் அவைதான்.

அவர் இறந்தார். அவர் சொன்ன கடைசி வார்த்தைகளின் மர்மத்தை என்னைத் தவிர வேறு யாரும் அறிந்துகொள்ளவில்லை.

அங்கிருந்தவர்களில் சில பெண்கள் அழுது கொண்டே, "ஆஹா, என்ன தைரியம்! என்ன வீரம்! இவர் அல்லவா உண்மையான தைரியசாலி!" என்று புகழ்ந்தனர்.

இவ்வாறு டாக்டர் தமது கதையைக் கூறி முடித்தார். அப்போது எங்களிடையே நிசப்தம் நிலவியது. முதலில் தம்முடைய பிரதாபத்தைக் கூறவந்த மேஜர் தம் கண்களில் ததும்பிய கண்ணீரை மறைப்பதற்காகத் தலையைக் குனிந்து கொண்டார்.

# ஸார், வருகிறீர்களா?

ஸோமாஸ்

"ஸார், வருகிறீர்களா? இப்படிக் கொஞ்ச தூரம் காலாற கிளப்பு வரைக்கும் போய் வரலாம்!" என்று குப்பு கேட்டதும் சுப்புவுக்கு ஆனந்தம் தாங்க முடியவில்லை.

இருந்தாலும் அந்த ஆனந்த பரவச நிலையை வெளிக்குக் காட்டிக் கொள்ளாமல், "...ஹி ஹி! இருக்கட்டும்...! கிளப்புக்கா...? என்னத்துக்கு ஸார்? நான்... வரவில்லை...நீங்கள் போய் விட்டு வாருங்கள் ... நான் ... இங்கேயே ... இருக்கிறேன்!" என்று இழுத்தாற் போலச் சொன்னார் சுப்பு.

"அட, நீர் ஒருத்தர்! சும்மா வாரும் ஐயா! போய் விட்டு வரலாம்!" என்று குப்பு மீண்டும் அடித்துச் சொன்னார்.

"ஆகா, பேஷாய் வருகிறேன். கரும்பு தின்னக் கூலியா!" என்று சொல்லும் போதே சுப்புவுக்கு ஆனந்தத்தால் தொண்டையை அடைத்துக் கொண்டது. யாராவது டிபன் வாங்கித் தரமாட்டார்களா என்று ஏங்கியபடி வெகு நேரமாகப் பசியால் வாடிக் கொண்டிருக்கும் அவருக்கல்லவா தெரியும் அதன் உபத்திரவம்?

கொஞ்சங் கூடத் தாமதம் பண்ணாமல் சுப்பு மறு நிமிஷமே குப்புவோடு புறப்பட்டு விட்டார்.

குப்பு முன்னால் போய்க் கொண்டே, "என்ன மிஸ்டர் சுப்பு. இந்தப் பொம்மனாட்டிகளுக்கு மட்டும் எத்தனை சொன்னாலும் தெரிகிறதில்லை. பண்ணுகிற டிபனைக் காலா காலத்திலே பண்ணித் தொலைத்தால் என்ன? அதுதான் கிடையாது. அதுவும் இன்றைக்கு ரொம்ப மோசம். வெகு நேரம் வரையில் டிபன் தயார் செய்யாமல் இருந்துவிட்டு நான் அதைப் பற்றிக் கேட்டபோது, 'இன்றைக்கு அகத்தில் கோதுமை மாவு துளிக்கூட இல்லை. என்ன செய்கிறது?' என்கிறாள். என்ன அக்கிரமம், பாருங்கள்!" என்று சொன்னார்.

சுப்பு, மிகவும் உற்சாகத்தோடு "ஆமாம், அகத்துப் பெண்டுகளுக்கு இது தெரியவில்லையென்றால் மிகவும் சிரமம் தான்!" என்று சொல்லி வைத்தார். அவர் மனக் கண் முன்னால் கிளப்பில் தயாராகும் முறுகல் தோசையும், வடையும் போண்டாவும் தோன்றி அவரை ஆட்கொண்டன.

மீண்டும் சுப்பு, "அதுதான் பார்த்தேன். 'எனக்கு டிபனும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம். நான் நேரே கிளப்புக்குப் போகிறேன். உன் டிபனை நீயே சாப்பிட்டுக்கொள்' என்று அவளிடம் இரண்டு வார்த்தை சத்தம் போட்டுவிட்டு, நேரே கிளப்புக்குப் புறப்பட்டு விட்டேன்!" என்று விஷயத்தைத் தொடரவே சுப்புவின் சந்தோஷம் எல்லையை மீறி விட்டது.

"இந்த மாதிரிதான் நம் அகத்துப் பெண்களுக்குப் புத்தி புகட்ட வேண்டும். டிபனை எதிர்பார்த்துக் கொண்டு காத்திருக்கக் கூடாது. நாம் பாட்டுக்குக் கிளப்புக்குச் சொல்லாமல் கொள்ளாமல் புறப்பட்டு விட வேண்டும். அப்போதுதான் அவர்களுக்குப் புத்தி வரும்!"

"மாலை வேளைகளில் நாலு மணிக்கு டிபன் தயாராகவில்லை என்றால் அதற்காக நான் காத்துக் கொண்டிருக்க மாட்டேன். அந்த டிபனைக் கொஞ்சங் கூட லக்ஷ்யம் செய்யாமல் நான் பாட்டுக்குக் கிளப்புக்குப் போய்விடுவேன். இது அவளுக்கு நன்றாய்த் தெரியும். எத்தனையோ தடவை அந்தமாதிரி ஆகியிருக்கிறது. இருந்தாலும் அவளுக்கு மட்டும் புத்திவருவதில்லை. என்ன ஆத்திரம் வருகிறது தெரியுமா?"

"ஊஹூம், நீங்கள் ரொம்ப மனசை அலட்டிக் கொள்ளக் கூடாது. டிபன் இல்லை என்றதும்தான் கிளப்புக்குப் புறப்பட்டு விட்டோமே, இனிமேல் எதற்குக் கோபம்? மேலும் வீட்டுப் பெண்களுக்கு அவர்கள் பண்ணி வைத்திருக்கும் டிபனைப் புருஷன் சாப்பிடாமல் போய்விட்டால் அதைப் போல் வேதனை தரும் விஷயம் வேறு ஒன்றும் இருக்க முடியாது."

சுப்பு இப்படித் தன்னை மீறிய தனி உற்சாகத்தோடு சொல்லி முடிப்பதற்கும் குப்பு அந்தத் தெரு மூலை திரும்புவதற்கும் சரியாயிருந்தது.

குப்பு அந்தக் கட்டிடத்தினுள் வேகமாக நுழைந்தார். சுப்புவும் பின்னாலேயே நுழைந்தார். அப்பொழுதுதான் அவர் கண்ணில் அந்தப் பாழாய்ப் போன போர்டு பட்டுத் தொலைத்தது. அதைப் பார்த்ததும் சுப்புவின் முகத்தில் பரிதாபமாக அசடு வழிந்தது.

குப்புவை விட்டுவிட்டு, ஒரு நிமிஷம் அங்கேயே அசைவற்று நின்று விட்டார், சுப்பு. ஏற்கெனவே அவர் வயிற்றைக் கிண்டிக் கொண்டிருந்த பசி இன்னும் அதிகமாகி விட்டது.

ஆமாம்; அது ஒரு 'பாட்மின்டன் கிளப்!' சுப்பு அதைப் பார்த்து விட்டு அசடு வழியாமல் இருப்பாரா?

திறமை மிக்க வேலைப்பாடு
வெகு நாள் மறையாது
திகழ்கிறது



திருச்சி மலைக் கோட்டை
236 அடி உயரம்
கி.பி. 17-ம்
நூற்றாண்டில் நிர்மா
ணிக்கப்பட்டது

# Stanes

## 'ஸ்டேன்ஸ்'
## சிகப்பு லேபில்
## சுத்தமான காப்பி



## தி யுனைடெட்
## காப்பி ஸப்ளை
## கம்பெனி
## லிமிடெட்

கோயம்புத்தூர்,
தென் இந்தியா

கோயமுத்தூருக்கு ஏஜண்டுகள்:
தி புரொவிஷன் ஸ்டோர்ஸ்
ராஜா தெரு.

வேலூருக்கு ஏஜண்டுகள்:
மெஸர்ஸ். வில்வம் பிரதர்ஸ்
கமிஸரி பஜார்.




"நாளைக்குப் பிள்ளையார் சதுர்த்திக்கு எங்கள் பள்ளிக்கூடத்திலே லீவு விட்டிருக்கிறார்களே!" என்று சொல்லிக் கொண்டே வந்தாள் காமு.

"எங்கள் பள்ளிக்கூடத்திலும்தான் லீவு விட்டிருக்கிறார்கள்!" என்றான் கணபதி.

"எங்கள் அம்மா நாளைக்கு நிறையக் கொழுக்கட்டை பண்ணப் போகிறாளே!"

"எங்கள் அம்மாவும் கூடத்தான் கொழுக்கட்டை பண்ணப் போகிறாள். வெல்லக் கொழுக்கட்டை, உப்புக் கொழுக்கட்டை, எள்ளுக் கொழுக்கட்டை" என்று கொழுக்கட்டைகளின் வகைகளை அடுக்கிக் கொண்டே போனான் கணபதி.

அப்பொழுது ஆகாயத்தை அண்ணாந்து பார்த்த காமு, "கணபதி! இன்று சந்திரன் ஏண்டா இவ்வளவு சின்னவனாகச் சந்தனக் கீறுபோலத் தெரிகிறான்?" என்று கேட்டாள்.

"இன்று மூன்றாம் பிறையோ, இல்லையோ! அதனால்தான்......" என்றான் கணபதி.

அவர்கள் பேச்சைக் கேட்டுக் கொண்டே வந்த அவன் அம்மா, "மூன்றாம் பிறைச் சந்திரனைப் பார்ப்பது விசேஷமாம். ஏனென்றால் அதைப் பரமசிவன் தம் தலையிலே அணிந்திருக்கிறாராம். ஆனால் நாலாம் பிறைச்சந்திரனைப் பார்க்கக் கூடாதாம்!" என்றாள்.

"ஏன் அம்மா பார்க்கக் கூடாது?"

"படாப் பழி ஏற்பட்டு விடும் என்று மலையாளம் பக்கத்திலே சொல்லுகிறார்கள்."

"படாப் பழியா? அது என்ன மாமி? புதிசாயிருக்கிறதே!" என்றாள் காமு.

"நாலாம் பிறை அன்று, அதாவது சதுர்த்தி அன்று, பிறர் கண்ணில் படக் கூடாது என்று சந்திரனுக்குச் சாபமாம். தப்பித் தவறி யாராவது பார்த்து விட்டால்கூட அவர்கள் மீது இல்லாத வீண் பழி சுமந்து விடுமாம், அதனால்தான் அதைப் படாப் பழி என்று சொல்லிக் கொள்கிறார்களாம்."

"ஏன் அம்மா! இந்தச் சாபம் யார் கொடுத்தார்கள்? எதற்காகக் கொடுத்தார்கள்?" என்று கேட்டான் கணபதி.

"பிள்ளையார் கொடுத்தார்!" என்றாள் தாயார்.

"பிள்ளையாரா? எதற்காக மாமி?" என்று காமு ஆவலுடன் கேட்டாள்.

"சொல்லுகிறேன், கேளுங்கள்!" என்று அம்மா அந்தக் கதையை ஆரம்பித்தாள்.

"அன்றைக்கு விநாயக சதுர்த்தி. விநாயகர் கொழுக்கட்டை, தேங்காய், பழம் இவற்றை கிளைத்துக் கொண்டு வீடு வீடாகப் பூஜை வேளைக்குப் போனார். ஒவ்வொரு வீட்டிலும் அவருக்கு வேண்டிய அளவு கொழுக்கட்டை படைத்தனர். தேங்காய் படைத்தனர். வேண்டுமளவு வயிறு முட்டக் கொழுக்கட்டைகளையும் தேங்காய்களையும் சாப்பிட்டார் விநாயகர். அவ்வளவு தின்ற பிறகும்கூட அவர் ஆசை தீரவில்லை. ஆனால் வயிற்றில் கொஞ்சமாவது இடம் இருந்தால்தானே? என்ன செய்வது என்று யோசித்தார் விக்னேசுவரர். மிகுந்த கொழுக்கட்டைகள், தேங்காய் மூடிகள், பழவகைகள் எல்லாவற்றையும் தன் மேல் துண்டில் மூட்டை கட்டி எடுத்துக்கொண்டு, வயிறு கொஞ்சம் கனம் குறைந்ததும் வீட்டில் போய்ச் சாப்பிடலாம் என்ற எண்ணத்துடன் புறப்பட்டார். ஊர் முழுவதும் உலகம் முழுவதும் பூஜை முடிந்து அவர் வீடு திரும்பும் பொழுது அஸ்தமித்து விட்டது.

மூட்டை நிறையக் கொழுக்கட்டைகளையும் தேங்காய் மூடிகளையும், நிறைந்த தன் பெருந் தொந்தியையும் தூக்கமாட்டாமல் தூக்கிக் கொண்டு நடக்க முடியாமல் நடந்தார்.

வழியில் ஒரு ஆறு குறுக்கிட்டது. அதைக் கடந்து செல்ல வேண்டியிருக்

ந்தது. தண்ணீரில் மெதுவாக யானை நடை போட்டுக்கொண்டு, தம் கொழுத்த உருவத்தின் பிரதிபிம்பத்தைப் பார்த்தவாறே நடந்தார். தண்ணீருக்கடியில் ஏதோ ஒன்று வெளுப்பாகத் தெரிந்தது. இளந் தேங்காய்க் கீறுதான் தம் மூட்டையிலிருந்து விழுந்து விட்டதோ என்று அவருக்குத் தோன்றிற்று. அவர் மூட்டையில் வேண்டிய தேங்காய்களும் கொழுக்கட்டைகளும் இருந்தன. வயிறும் பூரணமாக நிறைந்திருந்தது. இருந்தாலும் மோதகப் பிரியரான அவருக்குத் தண்ணீருக்கடியில் கிடந்த அந்தத் தேங்காயை விட்டுப் போக மனம் இல்லை. ஆசை அளவு மீறிப்போகவே, தம் துதிக்கையைத் தண்ணீரில் விட்டுத் துழாவி எடுக்கப்போனார். தண்ணீர் துதிக்கையை விட்டதும் கலங்கியது. தேங்காயும் மறைந்து விட்டது. எப்படியும் அந்தத் தேங்காயை எடுத்துக் கொண்டுதான் போவது என்ற தீர்மானத்துடன் வரிந்து கட்டிக்கொண்டு துழாவ முற்பட்டுவிட்டார்.



அப்பொழுது யாரோ 'கடகட' வென்று சிரிக்கும் சத்தம் அவர் காதில் விழுந்தது. நம்மைப் பார்த்து யார் சிரிக்கிறார்கள் என்று எண்ணி ஆகாயத்தை அண்ணாந்து பார்த்தார். சந்திரன் சிரித்துக் கொண்டிருந்தான். சந்திரன் தம்மை நோக்கிச் சிரிப்பதைக் கண்டதும் அவருக்கு ஆத்திரம் வந்தது. "எதற்காக என்னைப் பார்த்துச் சிரிக்கிறாய்?" என்று கோபத்துடன் கேட்டார்.

சந்திரன் சிரித்துக் கொண்டே, "இல்லை. இவ்வளவு கொழுக்கட்டைகளும் தேங்காய்களும்தான் உங்கள் மூட்டையில் இருக்கின்றன. போதாக்குறைக்கு வயிறு வெடிக்கும் அளவுக்கு வேறு தின்றிருக்கிறீர்கள். தண்ணீரில் தெரியும் என் பிரதிபிம்பத்தைத் தேங்காய் மூடி என்று எண்ணி எடுக்கப் பிரயாசைப் பட்டுக் கொண்டிருக்கிறீர்களே! அப்படியே ஒரு தேங்காய்க்கீறு தண்ணீரில் விழுந்து விட்டால்தான் என்ன? போனால் போகிறது என்று விட்டுவிடக் கூடாதா? உங்கள் ஆசையையும் அசட்டுத்தனத்தையும் நினைத்த பொழுது எனக்குச் சிரிப்பு வந்தது. அதனால்தான் சிரித்தேன்" என்றான்.

அதைக் கேட்ட பிள்ளையாருக்கு அவன் மேல் இன்னும் ஆத்திரம் பற்றிக்கொண்டு வந்தது. "நேற்றுப் பயல்! நீ என்னைப் பார்த்துப் பரிகாசம் செய்வதாவது? இனி அமாவாசை கழிந்த சதுர்த்தி அன்றைக்கு உன் முகத்தில் யாருமே விழிக்க மாட்டார்கள்!" என்று சாபம் கொடுத்தார்.

"உங்கள் சாபத்தை ஜனங்கள் லட்சியம் செய்வார்களாக்கும்! வேலை கெட்டுப் போய் எதற்காக ஐயா வாயை இழுக்கிறீர்!" என்றான் சந்திரன் ஏளனமாக.

பிள்ளையாருக்குக் கோபம் தலைக்கு ஏறியது. கண்களில் தீப்பொறி பறக்க, "நான் சாபம் கொடுப்பது, ஜனங்கள் கேட்காமல் இருப்பதா? அப்படி என் சாபத்தை மீறி அவர்கள் உன் முகத்தில் விழித்தால் அவர்களுக்குப் படாப் பழி கிட்டட்டும்! அதாவது சம்பந்தமில்லாமலே அவர்கள் மீது ஏதாவது பழி சுமத்தப்படும்" என்றார் தொந்தி விநாயகர்.

அவருடைய அந்தக் கோபத்தைக் கண்ட பின்தான் சந்திரனுக்குத் தான் பெரிய தவறு இழைத்து விட்டது தெரிந்தது. தீராத வினைகளைத் தீர்த்து வைக்கும் விநாயகரை யாராவது விரோதித்துக் கொள்வார்களா? சந்திரன் தன் தவறை உணர்ந்து மன்னிக்குமாறு அவரை மன்றாடி வேண்டிக் கொண்டான்.

பிள்ளையாரும் மனம் இரங்கி, "நான் சாபம் கொடுத்தது கொடுத்தது தான். நான்காம் பிறையை யாரும் பார்க்கமாட்டார்கள். ஆனால் மூன்றாம் பிறையைப் பார்த்தால் அவர்களுக்குப் போகுமிடத்துக்குப் புண்ணியம் கிட்டும்" என்று திருவாய் மலர்ந்தருளினார்.

அன்று முதல் ஜனங்கள் நான்காம் பிறையைப் பார்ப்பதில்லை. மூன்றாம் பிறைச் சந்திரனை மட்டும்தான் பார்க்கிறார்கள். பிள்ளையாரின் விரோதத்தைச் சம்பாதித்துக் கொள்வதென்றால் யாருக்கும் மனம் வராதல்லவா?" என்று கதையை முடித்தாள் தாயார்.

அந்தக் கதையைக் கேட்ட கணபதிக்குக் கொழுக்கட்டையும் கையுமாகப் பிள்ளையார் நிற்பது போலத் தோன்றியது. "எனக்கும் கொழுக்கட்டை என்றால் ரொம்பப் பிடிக்கும்!" என்றான் கணபதி.

"கொழுக்கட்டை தின்று உன் தொந்தியும் பருத்துவிட்டால், 'தொந்திக் கணபதிக்குத் தொந்தி பருத்த விதம் சொல்லு, சொல்லு' என்று பாடவேண்டியதுதான்!" என்று சொல்லியவாறே காமு தன் வீட்டுக்கு ஓரே ஓட்டமாக ஓடிவிட்டாள்.



# தைரியத் தவளை

-சாமா-



அந்தத் தாமரைத் தடாகத்தில் பல தவளைகள் நீந்தி விளையாடுவது வழக்கம். கரைகளிலிருந்து தவளைகள் வெகு உயரத்தில் தாவித் தண்ணீரில் குதிப்பது அவைகளுக்குக் குதூகலத்தைக் கொடுத்தது. எவ்வளவு சந்தோஷத்தில் அவைகள் இருந்தபோதிலும் அந்த தடாகத்திற்கு வரும் வாத்துக்களிடம் அவைகளுக்கு நடுக்கம் அதிகம். அவைகளை வாத்துக்கள் அப்படியே 'லபக்' என்று விழுங்கி விடுவது வழக்கம்.

இந்தத் தவளைகளின் நண்பனான சோனித் தவளை ஒன்று கரையில் வசித்து வந்தது. அது ரொம்ப நூதனமான பிறவியைச் சேர்ந்தது. தண்ணீரைக் கண்டாலே அதற்குப் பயம். தைரியம் என்பதே கிடையாது. கரையோரத்தில் வந்து தண்ணீரை எட்டிப் பார்த்துவிட்டுப் போய் விடுவது வழக்கம். எல்லாத் தவளைகளும் இதைப் பார்த்து, "ஐயையே! தவளையாய்ப் பிறந்து நீந்தப் பயப்படுகிறாயே! வெட்கமாயில்லையா? இந்தச் சின்னத் தடாகத்திலே நீந்தவே இப்படிப் பயப்படுகிறாயே? பெரிய குளங்கள் ஏரிகளில் எப்பொழுது நீந்தப் போகிறாய்? நீ சுத்தத் தடாகத் தவளையாகவே இருக்கிறாயே" என்று பரிகசிக்கும்; அந்தச் சோனித் தவளை அழ ஆரம்பிக்கும்.



ஒரு நாள் வழக்கம்போல் எல்லாத் தவளைகளும், கரையில் உட்கார்ந்திருந்த சோனித் தவளையைப் பார்த்துப் பரிகாசம் செய்துகொண்டே நீந்தின. ஒரு வாத்து தாமரை இலை மறைவிலிருந்து ஒரு மடாத் தவளையை விழுங்கப் போயிற்று. மடாத் தவளை எங்கேயோ பிராக்குப் பார்த்துக் கொண்டிருந்தது. கரையிலிருந்த பயந்தாங்கொள்ளி சோனித் தவளை பார்த்து விட்டது. அவ்வளவுதான். அப்படியே தண்ணீரில் பத்து அடி தாண்டிச் சீறிக்கொண்டு நீந்திப் போய் வாத்தின் கால்களைக் கவ்வி இழுத்தது. ஒரு நிமிஷம் தாமதம் ஆகியிருந்தால் மடாத்தவளை 'கோவிந்தா' ஆகியிருக்கும்.



வாத்து 'குவாக்' 'குவாக்' என்று இரைந்து சட்டென்று திரும்பியது. இந்தச் சப்தம் கேட்ட மடாத் தவளை நீந்தித் தப்பித்துக் கொண்டது. வாத்து திரும்புவதற்குள்ளேயே சோனித் தவளை மறுபடியும் நீந்திக் கரைக்குப் போயிற்று. எல்லாத் தவளைகளும் சோனித் தவளையின் திடீர் தைரியத்தைப் பாராட்டின. தனக்கு எப்படி இந்தத் தைரியம் வந்தது என்று அது ஆச்சரியப்பட்டது. அப்பொழுது ஒரு கிழத் தவளை "உன் உயிருக்கு நீ பயப்படுவது போல், பிறர் உயிருக்கும் பயப்பட்டதால், உனக்குக் கடவுள் தைரியத்தைச் சமயத்தில் கொடுத்தார். உன் உயிரைப்போல் பிறர் உயிரையும் நினைத்திருந்ததால் உன் சிநேகிதன் காப்பாற்றப் பட்டான்!" என்று கூறியது. "வாழ்க சோனித் தவளை! வாழ்க!" என்று எல்லாத் தவளைகளும் ஆரவாரம் செய்தன.





# ஆசையும் பாசமும்

**துஷ்யந்தன்**

"பாட்டைக் கொஞ்சம் நிறுத்துங்கோ" என்றார் ஒலிப் பதிவு நிபுணர் சம்பாஜி.

பாட்டு நின்றது.

"நீங்க இரண்டு பேரும்தானே பாடறது! இல்லே இரவல் குரல் ஏதாவது......" அவர் முடிப்பதற்குள் பிரதம நடிகை ரஞ்சிதா சீறி விழுந்தாள். "என்ன சார், அத்தனை மோசமா நினைச்சிட்டீங்களா! என் குரல்..."

"அடடா, பிரமாதம்! நான் அதைச் சொல்லலையே அம்மா! உங்க இரண்டுபேர் குரலோட மூன்றாவது குரல் ஒன்று கேக்குது. அதைத்தான் கேட்டேன்."

"என்ன, மூன்றாவது குரலா!" டைரக்டர் வியப்புடன் கேட்டார்.

"ஆமாம், சார்! நிச்சயமா அது..."

"மிஸ்டர் சம்பாஜி! எனக்குத் தெரியும். அது மோகினியின் குரல் என்று..." டைரக்டர் முடிக்கவில்லை.

"நான் பேத்தல்லே சார், நிஜம்தான்" சம்பாஜி அடித்துச் சொன்னார்.

"நான்சென்ஸ்" என்று முத்தாய்ப்பு வைத்தார் டைரக்டர்.

"சரி, மறுபடியும் பாடுங்கோ!"

'டூயட்' என்று சினிமா பரிபாஷையில் கூறப்படும் காதலர் இருவர் பாடும் பாட்டு ஆரம்பித்தது மீண்டும்.

'வளர்மதியாய் விரைவேனே'
'வான்முகிலாய்த் தொடர்வேனே'

"சார், சார்...மிஸ்டர் சம்பாஜி சொல்றது நிஜந்தான் சார். நல்லா குரல் கேக்குது. நிச்சயமா அது மோகினி குரல்தான்..." என்று பிரதம நடிகர் விரதபாலன் டைரக்டரிடம் கலவரத்தோடு முறையிட்டார்.

ஒருவரும் பேசவில்லை கொஞ்ச நேரம்.

கணீரென்ற குரல், தொலை தூரத்தில் கேட்டது.

'காலத்தைக் கடந்து நிற்பேன்—உனைக்
கண்ணிமை போல் காத்திடுவேன்'

புது வெள்ளி நாணயங்களைக் கீழே கொட்டினால் கேட்குமே அந்த மாதிரி சப்தம்.

டைரக்டர் மௌனமாக அவர் அறைக்குப் போனார். எட்ட நின்று கவனித்துக் கொண்டிருந்த நான் என் அறைக்கு வந்தேன்.

*

நான் திரைப்பட உலகத்தில் காலடி வைத்த காலம் அது. நடிகனாக இல்லை—இரவெல்லாம் டீ குடித்து விட்டுக் கதை வசனம் எழுதித் தள்ளும் உழைப்பாளியாக! அப்பொழுதுதான் அவனும் வந்து சேர்ந்தான். ஆனால் அவனுக்கு எதுவும் புதிதாக இல்லை. எல்லையற்ற ஆர்வமும் பொங்கி வழியும் பேரழகும் அவனுக்குத் துணை இருந்தன. 'கூவுகின்ற பூங்குயிலே, குதித்து ஓடி வரும் பெண்மானே' என்று ஆயிரம் முறை என்னை மறந்து பாடியிருக்கிறேன் நான்.

'வஞ்சம்' என்ற கதையில் அப்பொழுது நடித்துக் கொண்டிருந்தான். நாடோடிப் பெண் ஒருத்தியின் அன்பைப் பெறுகிறான் ஒருவன். இருவருமாகச் சேர்ந்து எங்கெல்லாமோ சுற்றுகிறார்கள். 'சினிமா' வழக்கப்படி அவன் அவளைக் கைவிட்டு வேறொருத்தியைக் கல்யாணம் செய்து கொண்டு போய் விடுகிறான். அவனைத் தேடித் தேடி அவள் அலைகிறாள். கடைசியாக ஒரு சர்க்கஸில் சேர்ந்து விடுகிறாள். திடீரென்று ஒரு நாள் அவள் கண்களில் அவனும் அவன் மனைவியும் கூட்டத்தின் நடுவில் தென்பட்டு விடுகிறார்கள். கையிலிருந்த கத்தியை வீசி எறிகிறாள். அவன் மனைவி அலறி விழுகிறாள். நாடோடிப் பெண் பைத்தியமாகி வெளியே ஓடுகிறாள்.

மோகினி அந்த நாடோடிப் பெண்ணாகத்தான் நடித்தாள்—இல்லை, நடிக்கவில்லை—உண்மையாக நாடோடியாக உருவெடுத்து ஆடினாள், பாடினாள்.

எதிலுமே நம்பிக்கை வைக்காத எனக்குக் கூட அந்தப் படம் பிரமாதமான வெற்றி காணும் என்ற நம்பிக்கை விழுந்தது. அதில்

மண்ணைப் போடவோ அல்லது வேறு காரணத்தாலோ படம் அரை குறையாக இருக்கும் போது ஒரு நாள் மோகினிக்குக் கடுமையான ஜுரம் கண்டது.

பணம் போட்ட முதலாளி முதல் வெறும் வார்த்தைகளை வீசி விட்ட என் வரையில் எல்லோருக்குமே இது பெரும் ஏமாற்றமாக இருந்தது.

எதிர்பாராமல் ஒரு நாள் மோகினி ஸ்டூடியோவுக்குள் நுழைந்தாள். எங்களுக்குத் தூக்கி வாரிப் போட்டது. நெருப்பாக வீசும் ஜுரத்தில் ஜன்னி கண்டு விட்டது என்று எங்களுக்குத் தோன்றியது.

"என்ன, மோகினி! பைத்தியமா உனக்கு! இந்த ஜுரத்தோட இங்கே வரலாமா! டாக்டர் அசையக் கூடாதுன்னு சொல்லலையா!" என்று கேட்டேன்.

அவள் பதில் என்னைக் கலக்கியது.

"அதெல்லாம் முடியாது சார்! நான் கத்தி வீசி வெற்றி பெறுகிற வரைக்கும் வந்துதான் போவேன். அப்புறம்தானே எனக்குப் பைத்தியம் பிடிக்கணும்......" என்றாள்.

என் நெஞ்சில் கத்தியைப் பாய்ச்சுவது போலிருந்தது. அவளைச் சமாதானப்படுத்தி வீட்டில் கொண்டு போய்ப் படுக்க வைப்பதற்குள் என்பாடு ரொம்பக் கஷ்டமாகப் போய் விட்டது.

அங்கேயும் அவள் பிதற்றியபடியேதான் இருந்தாள்.

'ஆடி வருவேன்—நான்
ஓடி வருவேன் ... ஓ......'

என்று பாடியபடியே இருந்தாள்; பாடியபடியே போய் விட்டாள் பேதைப் பெண். எரி நட்சத்திரம் போல வந்து போய் விட்டாள்.



ஒருவர் :—கான்ஸ்டபிள் ஐயா, ஓடுங்கள்! நாற்காலியைத் தூக்கிக் கொண்டு போன ஒருவன் மேல் ஒரு கார் இடித்து, கால் உடைந்து போய் விட்டது!

கான்ஸ்டபிள் :—இரண்டு கால்களுமா?

ஒருவர் :—இரண்டு காலா? நாலு கால்களும் போய் விட்டன.

கான்ஸ்டபிள் (ஆச்சரியத்துடன்) :—நாலு காலா?

ஒருவர் :—நாற்காலியின் கால்கள் ஐயா!

அந்தப் படம் அப்படியே நின்று விட்டது.

ரொம்ப நாட்களுக்குப் பிறகு இப்பொழுது மிஸ். ரஞ்சிதாவைக் கொண்டு அதே படத்தை எடுக்கலாம் என்று முதலாளிக்குத் தோன்றியது. அதன் விளைவு......

★

அழகான குன்று — பக்கத்தில் ஓடி வரும் காட்டாறு—சூழ்ந்திருக்கும் கானல் காடு—எல்லாமே போதை தரும் வஸ்துக்கள்தான். இந்தச் சூழ் நிலையில் நீரிலே மிதந்து வரும் படகைப் பார்த்தால் எப்படி இருக்கும்! அதுவும் தனிமையில் அதை வலித்து வரும் பெண்ணைப் பார்த்தால்...இப்படித்தான் முதன் முதலாகக் காதலனும் அந்த நாடோடிப் பெண்ணான காதலியும் சந்திக்கிறார்கள்.

குன்றின்மேலிருந்து படம் பிடிக்க ஏற்பாடு. படகிலே வரும் மிஸ். ரஞ்சிதாவைப் பார்த்தேன். ஏமாற்றம் என் நெஞ்சைத் துளைத்தது. மோகினி மட்டும் அந்த இடத்தில் இருந்தால் எப்படியிருக்கும்...! குமிழி யிட்டுப் பெருகி வரும் ஆற்று வெள்ளம் அவள் அழகைக் கண்டு தேங்கிப் போய் நின்று விடும்... பிறகு...என் கனவு கலைந்தது.

யாரோ கூச்சல் போடுவது காதில் கேட்டது.

படகிலிருந்த மிஸ் ரஞ்சிதா தண்ணீரில் விழுந்து தவித்துக் கொண்டிருந்தாள். ஸ்டூடியோ ஆசாமிகள் நாலைந்து பேர் வேகமாக ஆற்றில் விழுந்து அவளைத் தூக்கி விடப் போனார்கள்.

அவள் எப்படி ஆற்றில் விழுந்தாள் என்பதைப் புரிந்து கொள்ள ரொம்ப நேரமாயிற்று. படகு என்னமோ அழகாக மிதந்து கொண்டே போயிற்று; அதில் யாருமில்லை. இருந்தாலும் லாகவமாக யாரோ துடுப்புப் போட்டுக் கொண்டேயிருப்பது போல அந்தப் படகு போய்க் கொண்டேயிருந்தது.

மறுநாள் மிஸ் ரஞ்சிதா சொன்னதை என்னால் நம்ப முடியவில்லை. யாரோ தன்னை அப்பால் தள்ளி விட்டு அந்தப் படகில் உட்கார்ந்து கொண்டது போல இருந்ததாம் அவளுக்கு. யாரோ சிரிப்பதுபோல இருந்ததாம். பிறகு அவள் கையிலிருந்து துடுப்பைப் பிடுங்கிக் கொண்டது போலத் தோன்றியதாம். மறுகணம் அவளைப் பிடித்துத் தள்ளுவதுபோல... அதற்குப் பிறகு அவளுக்கு ஒன்றுமே தெரியவில்லை.

மிஸ்டர் சம்பாஜி மட்டும் நிச்சயமாகச் சொல்லிவிட்டார் அது மோகினிதான் என்று. அதோடு விடவில்லை அவர். "பேசாம இந்தப் படத்தை நிறுத்தி விடுவதுதான் தேவலை. மோகினி இல்லாம அதைப் பிடிக்கப் பார்க்கிறது அவ்வளவா எனக்குப் பிடிக்கல்லே" என்று அபிப்பிராயம் கொடுத்தார். அபிமானத்தால் அவர் சொல்லவில்லை. வேறு என்னமோ அவரை அப்படிப் பேசச் செய்கிறது என்று தெரிந்து கொண்டேன்.

அவர் கூறியது கொஞ்ச நாட்களுக்குப் பிறகு நிச்சயமாகி விட்டது.

காபேடாடிப் பெண் சர்க்கஸ் ராணியாக மாறிய பிறகு எடுக்க வேண்டிய வேறு சில காட்சிகள் இருந்தன. பெரிய சர்க்கஸ் கம்பெனி ஒன்றை உதவிக்காக அமர்த்தி யிருந்தோம். ரஞ்சிதாவின் முகத்தைக் 'க்ளோஸ்-அப்' எடுப்போம். அதன் பிறகு வேறு ஒரு பெண் - அந்த சர்க்கஸில் இருக்கிறவள் — என்ன வெல்லாமோ வித்தைக ளெல்லாம் செய்து காட்டுவாள். அதை ஒரு மாதிரியாக எடுத்துக் கொள்வோம். இரண்டையும் பிணைத்துப் போட்டால்.........அடடா ரஞ்சிதாவுக்குப் பெயரும்....... முதலாளிக்குப் பணமும் வந்து குவியும். ஏமாற்றுகிறோம் என்று எங்களுக்குத் தெரியும். இருந்தாலும், "அம்மா ஏமாற்றுங்கள் சார்! நாங்கள் பணத்தையும் கொடுத்து கையை வேறு தட்டுகிறோம் குஷாலாக!" என்று சொல்லுகிற பொதுஜனங்கள் இருக்கும்போது நாங்கள் என்ன செய்வது!

இந்த ஏமாற்றுக் காட்சிக்காகத்தான் அன்று ரஞ்சிதா தயாராக 'மேக்கப்' செய்து கொண்டிருந்தாள். உயரமான இரண்டு கம்பங்களுக் கிடையில் ஊசலாடும் இரண்டு நூலேணிகள். ஒன்றைவிட்டு ஒன்றைத் தாவிப் பிடிக்கிறாள் அவள். இல்லை...... அப்படித் தோன்றும்படி படம் காட்டப்பட வேண்டும்; அவ்வளவுதான்!

வழக்கம்போல ரஞ்சிதா முகத்தைக் காட்டினாள். வேறொரு பெண் ஊசலாட ஆரம்பித்தாள்.

கல கல வென்ற சிரிப்பொலி கேட்டது.

நூலேணிகள் ஒன்றை ஒன்று தழுவி அப்பால் ஒழுங்காகத்தான் சென்றன. ஆனால் ஊசலாடிய பெண் நிலைபெயர்ந்து குப்புற விழுந்து விட்டாள்.

அவளும் அதே கதையைத் தான் சொன்னாள்.

யாரோ அவளைப் பிடித்துத் தள்ளி விட்டார்களாம்!

அதற்குமேல் மிஸ்டர் சம்பாஜி எங்களுடன் ஒத்துழைக்க மறுத்து விட்டார். ஆனால் டைரக்டர் மட்டும் 'நான் சென்ஸ்' என்ற முகவுரை, பின்னுரைகளுடன் வேலையைத் தொடர்ந்தார்.

அதன் பலனை 'வஞ்சம்' வளர்ந்தது.

எனக்கு மட்டும் படம் முழுதும் உருவாகி வெளியே வந்து

## பால்ய நினைவு

"நீங்கள் ஏன் புஸ்தகம் எழுதுகிறீர்கள்!" என்று ஒருவர் ஒரு பிரபல ஆசிரியரிடம் கேட்டார்.

அந்த ஆசிரியர், "எனக்கு வயது வந்த காலத்தில் படிப்பதற்கு நல்லதாக ஏதாகிலும் வேண்டுமல்லவா அதற்காகத்தான் எழுதுகிறேன்" என்றார்.

அந்த ஆசிரியரின் வயது வந்த காலத்தில் வேறொரு ஆசிரியர் ஜகத்தைப் புரட்டும் அற்புதப் புஸ்தகம் எழுதினாலும் அவருக்கு எத்தவித இன்ப உணர்ச்சியும் ஏற்படுத்தாது போலும். அவருக்கு இன்பத்தை யளிப்பது, அவர் பால்யத்தில் எழுதிய புஸ்தகமாகத்தான் இருக்கும். இதை உணர்ந்துதான் அப்படிப் பதில் சொன்னாரோ என்னவோ!

உதாரணமாக என் தாத்தாவிடம் போய், "தாத்தா! சென்ற ஞாயிற்றுக்கிழமை சபாவிலே நடந்த மதுரை மணி கச்சேரி ரொம்ப பிரமாதமாக இருந்தது" என்று சொல்லுங்கள். உடனே அவர், "இது என்ன பாட்டுக் கச்சேரிடா, இந்தக் காலத்துக் கச்சேரி! எங்கள் காலத்தில் எப்படிப்பட்ட வித்வான்கள்! ஒவ்வொருவரும் சூரப்புலிகள் அல்லவா! ராகம் பாடி முடியவே நாலுமணி நேரம் ஆகும். அதுவல்லவா கச்சேரி!" என்பார் தாத்தா. இப்படி எத்தனையோ!

"தாத்தா, நானூறு மைல் வேகத்திலே பறக்கிற ஏரோப்ளேன் கண்டு பிடித்திருக்கிறார்கள்" என்றால், "இதென்ன பிரமாதம், எங்கள் காலத்திலே வீட்டிலே ஒரு இரட்டை மாட்டு வண்டி யிருந்தது! தலைக் கயிற்றைப் பிடித்துக்கொண்டு 'ஹை' என்றால் போதும்; தார் போடவேண்டிய அவசியம்கூட இராது. சிட்டாகப் பறக்கும், மணிக்கு நாலுமைல்!" என்பார்.

ஆனால் ரட்யார்ட் கிப்ளிங் என்ற ஆசிரியர் தமது முதுமைப் பருவத்தில் ஒருநாள் ஒரு புஸ்தகம் எடுத்துப் படித்துக் கொண்டிருந்தாராம். அதைப் படிக்கப் படிக்க அந்தப் புஸ்தகம் எழுதிய ஆசிரியரின் மேல் அசாத்தியக் கோபம் வந்ததாம். அந்தக் கோபத்தில் அவரைக் கொன்று விடுவோமா என்று தோன்றியதாம். அப்படிச் செய்தால் தற்கொலை என்ற பாதகத்துக்கு உள்ளாக நேருமே என்று கைவிட்டாராம்!

★

நாற்பது வருஷங்களுக்குப் பிறகு ஒரு நாள். என்னைச் சுற்றி பல இளைஞர்கள் நிற்கிறார்கள். அவர்களிடம் "அந்தக் காலத்தில் 'பால்ய நினைவு' என்ற தலைப்பில் சின்னஞ்சிறு கட்டுரை எழுதியிருந்தேன். ஆகா! அதை எவ்வளவு......" என்று பெருமை யடித்துக் கொள்கிறேன். அப்போது அவர்களில் ஒருவன், "அந்தக் கட்டுரை உங்களிடம் இருக்கிறதா!" என்கிறான். "இல்லை, எங்கோ கெட்டுப் போய் விட்டது! ஆனால் அதை எழுதிய நாட்கள்தான் நினைவிருக்கின்றன" என்கிறேன். உடனே அவர்களில் ஒருவன்; "என்னிடம், இதோ இருக்கிறது அந்தக் கட்டுரை" என்கிறான். "ஐயோ, தொலைந்தேன்!" என்கிறேன். அந்தக் கட்டுரையைப் படித்ததும் ரட்யார்ட் கிப்ளிங்குக்கு ஏற்பட்ட உணர்ச்சிதான் எனக்கும் ஏற்படுகிறது!

ஆகவே பால்யத்தில் செய்த காரியங்களை விட அவற்றின் நினைவுதான் மனசுக்கு எல்லையில்லாத இன்பத்தை நமக்கு ஊட்டுகின்றது. —வெங்கு.

பெயர் வாங்கும் என்ற நம்பிக்கை இல்லை. அந்த நம்பிக்கை மோகினியுடனே போய் விட்டது.

★

கடைசியாக ரொம்ப உற்சாகத்துடன் இறுதிக் காட்சிகளைப் பிடிப்பதில் ஈடுபட்டிருந்தார் டைரக்டர். மிஸ்டர் சம்பாதி இல்லாமற் போகவே மோகினியை நினைவுபடுத்த ஆள் கிடையாது.

ரஞ்சிதாகூடப் பரபரப்புடன் காணப்பட்டாள். எங்கிருந்தோ ஒரு ஆர்வம் அவளைத் தேடி வந்திருந்தது. அன்றுதான் அவள் கடைசியாக 'வஞ்சம்' தீர்த்துக் கொண்டு நாடோடிப் பெண் பைத்தியமாகப் போகும் காட்சி எடுக்க இருந்தார்கள்.

'சர்க்கஸ்' பார்க்க ஏராளமான பேரைச் சேர்த்து வைத்திருந்தோம். முதல் வரிசையில் ஏமாந்துப் போன காதலனும், அவன் புது மனைவியும் உட்கார்ந்திருக்கிறார்கள்.

ஓடுகிற குதிரை ஒன்றின்மீது ரஞ்சிதா நடனமாடுகிறாள். கண்ணைக் கவரும் உடை, கையிலே கத்தி. சர்க்கஸ் மட்டுக்கும் உரித்தான ஒரு வகை மேல் நாட்டுச் சங்கீதம்...குதிரை சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருக்கிறது. ஆ, இது என்ன! ரஞ்சிதா அலறியபடியே கீழே விழுகிறாள். ஆனால் கையிலிருக்கும் கத்திமட்டும் அந்தப் 'புது மனைவி'யைத் தேடிக்கொண்டு வெகு வேகமாக வருகிறது......

சட்டென்று பக்கத்திலிருந்த விளம்பரப் பலகை ஒன்றை எடுத்து அந்தப் பெண்ணின் முன்னால் கை நடுங்க நிறுத்தினேன். 'சரக்' கென்று அதிலே பாய்ந்து நின்றது கத்தி. 'அப்பாடா!' ஒரு நிமிஷம் தாமதித்திருந்தால் எவ்வளவு பெரிய உற்பாதம் ஏற்பட்டிருக்கும்.

ஒருவர் முகத்திலும் இப்பொழுது உற்சாகமில்லை. கீழே விழுந்த ரஞ்சிதா ரொம்ப நேரம் அந்த நிலையில் இல்லை.

"ஆ...ஆசையெல்லாம் அழிந்த போச்சோ - நேசமெல்லாம் தேய்ந்த போச்சோ!" என்று பாடியபடியே கிளம்பி விட்டாள்.

அவள் கண்களைப் பார்த்ததும் எனக்கு எல்லாம் விளங்கிவிட்டது. ரஞ்சிதா இனிமேல் ஒரு பைத்தியம்......!

திடீரென்று அவள் கீழே விழுந்ததும் கத்தி மட்டும் பறந்து வந்ததும்......அந்தக் குதிரைப் பக்கம் திரும்பினேன். அட! இத்தனை குழப்பத்திலும் அதுமட்டும் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தது.

டைரக்டர் சலிப்போடு அப்படியும் இப்படியும் உலவிக் கொண்டிருந்தார். அவர் வாய் மட்டும் "மோகினி! மோகினி!" என்று முனகியபடியே இருந்தது.

அது மோகினியில்லை. அவளுடைய ஆர்வம். எல்லையற்ற அவள் ஆசை. காலத்தைக் கடந்து நிற்கும் அந்த ஆசையும் பாசமும் தான் இது.

# அவன் பார்த்தது!

ஒரு ஆஸ்பத்திரியில் அனேக நோயாளிகள் படுத்துக் கிடந்தார்கள். அதுவும் குறிப்பிட்ட அந்த வார்டில் நகரக்கூடச் சக்தியில்லாத நோயாளிகள் சிலர் கட்டிலோடு கட்டிலாகக் கிடந்தார்கள்.

அவர்களுக்கெல்லாம் வெளி உலகம் எப்படியிருக்கிறது என்று பார்க்க ரொம்ப ஆவலாயிருந்தது. ஆனால் அவர்கள் என்ன செய்ய முடியும்? ஜன்னல்களெல்லாம் மிகவும் உயரத்தி லிருந்தன.

அதிர்ஷ்டவசமாக ஒரு நோயாளியின் கட்டில் சுவரோரமாக இருந்தது. சுவரில் இருந்த சின்னத் துவாரத்தின் வழியாக வெளியுலகம் கொஞ்சம் தெரிந்தது.

அந்த நோயாளி துவாரத்தின் வழியாகப் பார்த்து வெளியுலகக் காட்சிகளையெல்லாம் சுவாரஸ்யமாகச் சொல்வான்.

"அதோ ஒரு பெரியவர் அந்த மல்லிகைக் கொடியிலிருந்து மல்லிகைப் பூப் பறிக்கிறார். அவர் அருகில் ஒரு சின்னப் பெண் பாவாடை கட்டிக் கொண்டு நிற்கிறாள். இரண்டு பேரும் கோயிலுக்குப் போகிறார்கள்போலிருக்கிறது!" என்று கூறுவான் அந்த நோயாளி ஒரு நாள். இன்னொரு நாள், "அப்பப்பா! அந்தப் பெண்மணியின் முகத்தில்தான் என்ன கவர்ச்சி! அவள் முகம் லேசாகத்தான் இந்தத் துவாரத்தின் வழியாகத் தெரிகிறது! ஆனால் அந்த முகத்தைப் பார்த்தாலே வியாதியெல்லாம் தெறித்துப் போய்விடும்!" என்பான்.

நோயாளிகள் அவன் கூறுவதைக் கேட்டுத் தங்கள் நோயையும் ஓரளவுக்கு மறந்திருந்தனர். ஒரு நோயாளிக்கு எப்படியாவது அவன் கட்டிலுக்கு மாற்றிக்கொள்ள வேண்டும் என்று ஆசையாயிருந்தது.

மேற்படி கட்டிலில் படுத்திருந்த நோயாளி பூரண சுகம் அடைந்து, வீட்டுக்குப் போய் விட்டான்.

அந்தக் கட்டிலுக்கு மாற்றிக்கொள்ள விரும்பிய நோயாளிக்கு அதிர்ஷ்டவசமாக இப்போது அந்தக் கட்டிலே கிடைத்தது. அவன் அதில் படுத்ததும் முதல் காரியமாக ஆவலோடு அந்தத் துவாரத்தின் வழியாக வெளியுலகக் காட்சிகளைப் பார்த்தான். என்ன ஆச்சரியம்! அந்த நோயாளி என்னென்னவோ காட்சிகளையெல்லாம் பார்த்துக் கூறுவானே! அவன் கூறியது ஒன்றைக்கூடக் காணோமே! அந்தத் துவாரத்தின் வழியாகத் தெரிந்தது ஒரு இடிந்த குட்டிச் சுவர்தான். — விஜயம்




புதுமை பெறுங்கள்! முதலில் ஸ்நானம் செய்ததும் சார்மிஸ் டால்கம் பவுடரை உடல் முழுவதும் தூவுங்கள். எத்தகைய புதுமை உணர்ச்சி அது அளிக்கும் தெரியுமா?

மிருதுத்தன்மை பெறுங்கள்! உடலில் சுரணையுள்ள இடங்களிலும் பவுடரை நன்றாக தடவிவிடுங்கள். அது பட்டைப்போல படர்ந்து எரிச்சல் வராமல் பாதுகாக்கிறது.

நீடித்த இனிமையுடன் இருங்கள்! சார்மிஸ் டால்கம் பவுடரை தாராளமாக அடிக்கடி உபயோகியுங்கள். அது செலவில்லாமல் பெருவாழ்வு அளிக்கும் சாதனம் அழகிற்கும் காதல் கவர்ச்சிக்கும் இதுவே சிறந்த ரகசியம்.



# சார்மிஸ்

## டால்கம் பவுடர்

பரவசப்படுத்தும் மனோஹரமான நறுமணம் முள்ளது.



தாய்மார்கள் விரும்பி வாங்கும் அழகிய ஸ்டீல் தொட்டில். கொசு வலை ஸ்டாண்டுடன் கூடியது மலிவான விலை நீடித்த உழைப்பு!



ஸ்டீல் மாஸ்டர் மடக்கும் நாற்காலி. வீடு, ஆபீஸ், ஹோட்டல், சினிமாக் கொட்டகை ஆஸ்பத்திரி, காண்டீன் முதலியவைகளுக்கு இன்றியமையாதவை. மிகக் குறைந்த விலை. உறுதியான ஸ்டீல் நாற்காலி.



விவரங்களுக்கு:

**ஸாம்ஸன் & கம்பெனி, லிட்.**

151, பிராட்வே :: மதராஸ் - 1

போன்: 4521 தந்தி: BARAPASH



10ரியாதை வாரம்
1
பக்காத் திருடன் பிடிபட்ட செய்தியைக் கேட்டு, ஸ்தலத்திற்கு
2
..வாத்தியங்களுடன் சென்று, சகல..
3
மரியாதையுடன் அவனுக்குக் காப்பு கள் அணிகிறார்கள். கெட்டி மேளம் கொட்டுகிறது.
4
பூர்ண கும்பத்துடன் ஊர்வலம் வருகிறார்கள்.
5
மரியாதையுடன் கட்டில் அமர வைத்து, உண்மையைச் சொல்லும் வரை..
6
..தயவுசெய்து உங்களை, நீங்களே அடித்துக் கொள்ள வேண்டும்... உம். வலிக்கப் போகிறது, மெள்ளவே நடக்கட்டும் என்கிறார் இன்ஸ்பெக்டர்.
7
அடாடா! என்ன மரியாதை. திருடினால், இந்த வாரத்திலல்லவா திருட வேண்டும் என்கிறான் திருடன்.
—ராமா—

# ஜயத்தின் கடிதம்

நாராயண ராவ்

ஆம், ஜயம்தான் எனக்கு எழுதி யிருக்தாள். அந்தக் கடிதத்தின் கடைசி வரிதான் என்னை இருண்ட உலகத்துக்கு அழைத்துச் சென்றது. அதே கடைசி வாக்கியம்தான் என் கற்பனைக் கோட்டைகளைத் தூள் தூளாக்கியது. அந்தக் கடைசி வரியை திரும்பவும் ஒரு முறை படித்தேன்.

''......உங்களை மணக்க நான் ஏன் விரும்பவில்லை, தெரியுமா! ஏனென்றால், உங்கள் முகம் அழகாயிருக்கிறது! ஆம், உங்கள் முகம் அழகாயிருப்பதுதான் காரணம்! தங்கள்,
ஜயம்''

என் உள்ளத்தின் ஆழத்திலிருந்து ஒரு பெருமூச்சுக் கிளம்பியது. ஒருவனுடைய அழகு அவனுடைய காதலுக்கு உறுதுணை என்று எழுத்தாளர்கள் எழுதுகிறார்கள். அழகான இளைஞர்களின் வாழ்க்கை அவர்கள் விரும்பும் யுவதிகளோடு இணையும் விதத்தை ஆயிரமாயிரம் சிறு கதைகள் அன்றாடம் அறை கூவுகின்றன. ஆனால்......என் விஷயம் இதற்கு முற்றிலும் மாறுபட்டதா யிருந்தது.

என் கையிலிருந்த கடிதம் என்னை யறியாமலேயே சுழன்று சுழன்று கீழே விழுந்து தரையில் தட்டுப்பட்டது. என் உள்ளமும் சுழன்றவாறே பழைய நினைவுகளுடன் மூட்டியது.

*　　　*　　　*

அன்று ஞாயிற்றுக்கிழமை. மத்தியான வேளையில் ஒரு வேலையுமின்றித் தெருவை நோக்கியவண்ணம் வாசற்படியில் நின்று கொண்டிருந்த எனக்கு, பக்கத்து வீட்டின் எதிரில் ஒரு 'டாக்ஸி' வந்து நின்றது ஆச்சரியத்தை விளைவித்ததோடு ஆவலையும் தூண்டியது.

முதலில் 'டாக்ஸி'யிலிருந்து பக்கத்து வீட்டின சொந்தக்காரர் சாவிக் கொத்துடன் இறங்கினார். அவரை அடுத்தாற்போல் நாற்பத்தைந்து வயது மதிக்கத் தக்கவர் ஒருவரும், அவருடைய மனைவி என்று சொல்லத்தக்க ஒரு பெண்மணியும் இறங்கினார்கள். அதற்குப் பின் இறங்கினான் அவன். அட! கோபு போலிருக்கிறதே! ஆம், கோபுவேதான்! ஆனால் அவன் என்னைப் பார்க்கவில்லை.

அவனுக்குப் பின்னால், 'டாக்ஸி'யின் பின் சீட்டிலிருந்து ஒரு கிளி—இல்லை, இல்லை...... பச்சைச் சேலை யுடுத்தி, சிவந்த முகத்துடன் ஒய்யாரமாக ஒரு கங்கை இறங்கினாள். அந்த நாரீமணி யாராயிருக்கும்!

ஓ! இப்பொழுதுதான் ஞாபகம் வருகிறது! அவள் கோபுவின் தங்கை ஜயம்தான்! சிறு வயதில் ஒரு கிழிசல் 'கௌனை' மாட்டிக்கொண்டு ரகளை செய்யுமே, அந்தக் 'குட்டி ஜயமா அது! என் கண்களை என்னாலேயே நம்பமுடியவில்லை.

அதற்குள் வீட்டுக்காரர், கதவைத்திறந்து தாமும் அவர்களுடன் உள்ளே நுழைந்தார். அந்தப் பெண் மாத்திரம், தன் கைவளையல்கள் குலுங்க, கையை ஒய்யாரமாகத் தூக்கி, முகத்தின்மேல் விழுந்த கேசத்தைச் சரிப்படுத்திக்கொண்டு சுற்றுமுற்றும் பார்த்தாள். அவளுடைய பார்வை என் மேல் விழுந்தது! ஒரு விநாடி......அவ்வளவுதான்! கண்கள் கண்களோடு பேசுவதற்கு அதற்கு மேல் அதிக நேரம் எதற்கு!

அந்தச் சந்திப்பு அவளுக்கு அதிர்ச்சியைத் தந்திருக்க வேண்டும்! இல்லாவிட்டால், அவள் முகம் அப்படி 'குப்'பென்று சிவந்திருக்க வேண்டிய நியாயம் இல்லை அல்லவா! அடுத்தகணம் அவள் உள்ளே ஓடி விட்டாள்.

சிறிது நேரத்துக் கெல்லாம் கோபு வெளியே வந்து சுற்றுமுற்றும் பார்த்தான். என்னைக் கண்டதும் அவன் அளவு கடந்த வியப்படைந்திருக்க வேண்டும். கண்களைத் துடைத்துக் கொண்டு இன்னொரு தடவை பார்த்தான். பிறகு, ''டேய், நீ இங்கே எங்கேடா வந்தாய்!'' என்று கேட்டான்.

''நானா வந்தேன்! நீதானேடா இங்கே புதிசாக வந்திருக்கிறாய்!'' என்று சொல்வதற்குள், அவன் என்னைக் கரகர வென்று தன் வீட்டுக்குப் பிடித்து இழுத்துக் கொண்டு போனான். உள்ளே எவ்வளவு நேரம் பேசிக் கொண்டிருந்தோமோ, தெரியாது! ஆனால், அவள்......ஜயம், ஒவ்வொரு தடவையும் போகும்போதும் வரும்போதும் என்மீது கண் வீச்சு வீசிக்கொண்டு சென்றதை மட்டும் நான் கவனிக்கத் தவறவில்லை.

அது முதற்கொண்டு, நான் காரணமில்லாமலே அவன் வீட்டுக்குப் போகத் தொடங்கினேன். சில நாட்களுக்குப் பிறகு அதற்கும்



பிரமுகர் (பெருமையாக):—என்ன பாருங்கோ, எனக்கு வருஷா வருஷம் பத்தாயிரம் ரூபாய் வருமான வரி கட்ட வேண்டி யிருக்கிறது!

வந்தவர்:—அவ்வளவு வரி இருக்காதே! உங்களுக்குச் சம்பளம் ரொம்பக் குறைவாச்சே! ஒருவேளை லஞ்சம் வாங்கின பணத்துக்கும் வரி போட ஆரம்பித்து விட்டார்களோ?

அவசியமே இல்லாமல் போய் விட்டது. ஏனெனில் ஜயம் என் தங்கை விமலாவுடன் பேசும் சாக்கை வைத்துக் கொண்டு என் வீட்டிலேயே நாள் பூராவும் கூடாரம் போடத் தொடங்கி விட்டான். அது முதல் எங்கள் இருவர் கண்களும் சந்தித்து மௌன பாஷையில் ஏதாவது பேசாத நாளே கிடையாது.

என் ஜாதக ராசி போல் இருக்கிறது. நான் காத்திருந்த சமயமும் கிடைத்தது. அன்றும் ஞாயிறுதான்; எங்கள் வீட்டில் என்னைத் தவிர எல்லோரும் 'மாடினி ஷோ' வுக்குப் போயிருந்தார்கள். நான் மட்டும் தனியாக என் அறையில் உட்கார்ந்து கொண்டு மிகத் தீவிரமாக ஏதோ மனக் கோட்டைகள் கட்டிக் கொண்டிருந்தேன்.

திடீரென்று வளையல் குலுங்கும் சத்தம் என் சிந்தனையைச் சிதற வைத்தது. அதைத் தொடர்ந்தாற் போலவே, ''விமலா! விமலா!'' என்று கீச்சுக் குரலில் என் தங்கையைக் கூப்பிடும் சத்தமும் கேட்டது. வாயு வேகத்தில் ஓடி வந்த ஜயம், என்னை தனியாகக் கண்டதும், பிரேக் போட்டது போல சடக்கென்று நின்று, கலைந்து விழுந்த தன் புடவைத் தலைப்பைச் சரி செய்து கொண்டாள்.

அந்த அருமையான சந்தர்ப்பத்தை வீணாக்க என் மனம் இடம் தரவில்லை.

அவளைப் பார்த்து, ''ஏன்! என்ன அவசரம்!'' என்று மெதுவாகக் கேட்டு வைத்தேன்.

''ஆமாம்! அவசரந்தான்! வளையல்காரன் வந்து காத்திருக்கிறான். எங்கே விமலா!'' என்று கேட்டாள் அவள்.

''இந்த அறைக்குள் தான் எங்கேயோ இருக்கிறாள்! கண்டுபிடி, பார்க்கலாம்!'' என்று வேண்டுமென்றே சொன்னேன்.

பாவம்! அவள் சின்னக் குழந்தையைப் போல் என் அறைக்குள் வந்து ஒவ்வொரு மூலையையும் முடுக்கையும் தேடிவிட்டு என்னைப் பார்த்துத் 'திருதிரு' வென்று விழித்தாள்.

அவள் கண்களுக்குள் சிறியதாகத் தெரிந்த என் உருவத்தை ஊடுருவிப் பார்த்தேன் நான். அவளும் தன் பார்வையைத் திருப்பவில்லை.

ஜயம் என்ன நினைத்துக் கொண்டாளோ, தெரியவில்லை! இருந்தாற்போலிருந்து தன் முத்துப் பற்கள் அத்தனையும் வெளியே தெரியக் 'கல கல' வென்று சிரித்தாள். அடுத்த கணம் அங்கிருந்து ஓட்டம் பிடித்தாள்.

அவள் ரேழி வரையில் போயிருப்பாள். அப்போது நான், ''ஜயம்!'' என்று மெதுவாகக் கூப்பிட்டேன்.

ஜயமும், இதை எதிர்பார்த்தவள் போல் திரும்பி ஓடி வந்து, ''என்ன!'' என்று தலையைக் கோணலாகத் திருப்பிக்கொண்டு கடைக் கண்ணால் என்னை நோக்கியவாறே கேட்டாள்.

''ஜயம்! நான் ஒன்று கேட்கிறேன்...... கோபித்துக் கொள்ள மாட்டாயே!''

அவள் முகத்தில் கேள்விக்குறி படர்ந்ததே யொழிய வாய் பேசவில்லை.

மனத்தில் நினைத்ததை நேரடியாகக் கேட்க எனக்கு என்னமோ மாதிரி இருந்தது. ஆகவே மேஜை மேல் கிடந்த துண்டுக் காகிதம் ஒன்றை எடுத்துப் பின் வருமாறு எழுதினேன்:

''போகும் போதும் வரும் போதும் உன் அழகிய கண்கள் என்னுடைய கண்களோடு ஏன் பேசுகின்றன என்ற காரணத்தை அடியேன் அறியலாமா!''

நான் அதை எழுதி முடிக்கு முன்பே, ஜயம் அந்தக் காகிதத்தை வெடுக் கென்று பிடுங்கிக் கொண்டாள். அதைப் படித்ததும் அவள் உடலிலிருந்த இரத்த மெல்லாம் முகத்தில் ஏறியது!

மேஜையின் மேல் அதே துண்டுக் காகிதத்தை வைத்து, அதன் பின்புறத்தில், தன் ரவிக்கைக்குள் செருகியிருந்த பேனாவை ஒயிலாக எடுத்து ஏதோ எழுதினாள் ஜயம். அதை எழுதும்போது, லேசாக அவள் கைகள் நடுங்குவதை நான் கவனிக்கத் தவறவில்லை. அடுத்த கணம் அந்தச் சீட்டை என் மீது வீசி எறிந்தாள். ஒரு சிரிப்பு! அப்புறம் ஒரு ஓட்டம்! ஆஹா! அவளுடைய அந்தச் சிரிப்பில்தான் என் மனம் எப்படிச் சொக்கிப் போயிற்று!

அவள் எழுதியிருந்தாள்: ''ஏனென்றால்... ஏனென்றால்...உங்கள் முகம் அழகாயிருக்கிறது...''

சின்னக் குழந்தையைப் போல் மனத்தில் பட்டதை அப்படியே எழுதி விட்டாள்.

* * *

அன்று ஜயத்துக்கு ஏதோ உடம்பு. அவள் ஆஸ்பத்திரிக்குப் போக வேண்டியிருந்தது. அவள் அண்ணன் கோபு அப்போது ஊரில் இல்லை. அவளுக்கோ, தன்னந் தனியாக



அவ்வளவு தூரம் போகக் கூச்சம். ஆகவே என்னுடைய துணை நாடப்பட்டது.

இருவரும் கிளம்பினோம். பஸ் ஸ்டாப்புக்குப் போய் நிற்கும் வரை இருவரும் பேசவில்லை. பஸ்-ஸ்டாப்பில் போய் நின்றதும் அவளே பேச்சை ஆரம்பித்தாள்.

"வரும்போது எவளோ ஒருத்தி ரொம்ப நாள் பழகியவள் போல உங்களைப் பார்த்துப் புன்முறுவல் பூத்தாளே, யார் அவள்! உங்களோடு கூடப் படித்தவளோ!" என்று கேட்டாள்.

"வரும்போதா! என்னைப் பார்த்துப் புன்முறுவல் பூத்தாளா! நான் ஒன்றையுமே கவனிக்க வில்லையே!" என்று பட்டப் பகலில் புளுகினேன் நான்.

"யாரையோ பார்த்துச் சிரித்தாள் போலிருக்கிறது!" என்று என் காதில் விழும்படியாக உரக்கச் சொல்லித் தன்னைத் தானே சமாதானப் படுத்திக் கொண்டாள் ஜயம்.

அப்போது எனக்குத் தெரிந்த இரண்டு நர்ஸ்கள் பஸ் ஸ்டாப்புக்கு விரைந்து வருவது தெரிந்தது. இவர்களெல்லாம் ஏன் இந்தச் சமயத்தில் வந்து தொலைகிறார்கள் என்று சங்கடப்பட்டது என் மனம். ஆகவே நான், "பஸ்ஸில் தானா போகவேண்டும்! நடந்தே போய்விடலாமே!" என்றேன்.

"ஊஹூம். அவ்வளவு தூரம் என்னால் நடக்க முடியாது. பஸ்ஸிலேயே போய்விடலாம்!" என்று மறுத்துவிட்டாள் ஜயம். சமயத்தில் அந்த இடத்தை விட்டு நழுவி



விடலாம் என்று நினைத்த என்னுடைய ஆசையில் மண் விழுந்து விட்டது!

அதற்குத் தகுந்தாற் போல் அந்த இரு நர்ஸுகளும், "ஹலோ மிஸ்டர் நாராயணன்! எங்கே! ஆஸ்பத்திரிக்கா!" என்று ஏக காலத்தில் கேட்டுக் கொண்டே என் பக்கத்தில் வந்து நின்றார்கள்.

"இல்லை......இல்லை......ஆமாம்!" என்று ஏதோ சொல்லி மழுப்பினேன் நான்.

"சரி...அது யார்!......ஓஹ்......ஹோ! இவ்வளவு நாள் எங்களுக்குத் தெரியாதே!" என்று எதையோ அதிசயத்தைக் கண்டு பிடித்து விட்டவள் போல் நர்ஸ் பத்மா, ஜயத்தைச் சுட்டிக்காட்டி ஆச்சரியப்பட்டுக் கொண்டாள்.

"இப்பொழுதெல்லாம் மிஸ்டர் நாராயணன் முன்மாதிரி இல்லை. இதையெல்லாம் நம்மிடம் சொல்வதில்லை. ஒரு கல்யாணக் கடிதாசுக்குக் கூட அருகதையற்றவர்களாகி விட்டோம்" என்று குறும்புடன் கூறிக் குறைப்பட்டுக் கொண்டாள் மற்றவள்.

அவர்களிருவரையும் அங்கேயே வெட்டி வீழ்த்திவிடலாமா என்று ஆத்திரப்பட்டது என் மனம். இந்தப் பாழாய்ப் போன பஸ்ஸாவது சீக்கிரம் வந்து தொலைக்கக் கூடாதா!

நான் மெல்ல ஜயத்தின் முகத்தைப் பார்த்தேன். அவளது களங்கமற்ற முகத்தில் ஆயிரமாயிரம் எண்ணங்கள் ஒன்றோடொன்று போராடுவது தெரிந்தது. நான் எவ்வளவு சங்கடமான, ஆபத்தான நிலைமையிலிருக்கிறேன் என்பதை என் கலவரமடைந்த உள்ளம் கணக்கிட்டுக் கொண்டிருந்தது.

ஆஸ்பத்திரிக்குப் போனோம். அங்கேயும் அதே கதிதான். ஜயம் சோர்ந்த உள்ளத்துடனும் உடலுடனும் 'வெயிட்டிங் ரூமில்' உட்கார்ந்திருந்தாள். வந்த நர்ஸ்கள் எல்லோரும் வெளியே நின்றுகொண்டிருந்த என்னோடு பேசிவிட்டுப் பேசிவிட்டு போய்க்கொண்டிருந்தார்களே தவிர, ஒருவராவது உள்ளே இருந்த ஜயத்தைக் கவனிக்கவில்லை.

எனக்கு அங்கே இருப்புக் கொள்ளவில்லை. கடைசியில் யாரோ ஒரு புது நர்ஸ் ஜயத்தைச் சிறிது நேரம் பரிசோதனை செய்து விட்டு, அடுத்த புதன்கிழமை வரும்படி சொல்லி யனுப்பிவிட்டாள்.

ஜயம் பேசாமல் எழுந்து நடந்தாள். நானும் பின்னாலேயே நடந்தேன். அப்போது எதிர்ப்பட்ட ஒரு நர்ஸ், அவள் முன்பு எப்போதோ எனக்கு வெகுமதியாக அளித்த 'பார்க்கர்' பேனா சௌக்யமாக இருக்கிறதா என்று கேட்டுத் தெரிந்து கொண்டாள்.

சிறிது நேரத்துக்கெல்லாம் அவள் தோழி ஒருத்தி வந்து, நான் அவளுக்கு அன்பளிப்பாகக் கொடுத்த பார்க்கர் பேனா இன்னும் பத்திரமாக இருக்கிறது என்று தெரிவித்துக் கொண்டாள்.

இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த ஜயம், தன்னையும் மீறி 'களுக்' கென்று சிரித்து விட்டாள். அவளது அந்தச் சிரிப்பில் அளவுக்கு மீறிய வெறுப்புணர்ச்சியும், சிறிது ஏளனமும் இருந்ததை நான் கவனிக்கத் தவறவில்லை.

வீடு வந்து சேரும் வரையில் ஜயம் என்னைத் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. ஏதோ மிகத் தீவிரமாக யோசிக்கிறாள் என்பதை மட்டும்

நான் ஒருவாறு ஊகித்தறிந்தேன். அன்றைக்குப் பின் ஜயம் எங்கள் வீட்டுக்கு அதிகமாக வருவதில்லை.

சில நாட்களுக்கெல்லாம் ஜயத்தின் தகப்பனருக்குக் கும்பகோணத்துக்கு மாற்றலாகி விட்டது. வண்டியில் ஏறும்போது, அவளுடன் அவளையே கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்த என்னைத் திரும்பிக்கூடப் பாராமல் போய்விட்டாள் ஜயம். என் வாழ்க்கையில் முதல் தடவையாக ஒரு பெண்ணின் வெறுப்புணர்ச்சிக்கு ஆளானதை நினைக்கும் பொழுது என் மனத்தை என்னவோ செய்தது.

* * *

வேறு ஊருக்குச் சென்று கூடப் பாவம், அந்தப் அப்பாவிப் பெண் என்னையே நினைத்துக் கொண்டிருந்திருக்கிறாள்! ஊருக்குப் போய்ச் சேர்ந்த சில நாட்களுக்குப் பிறகு எனக்கு அவளாகவே ஒரு கடிதம் எழுதியிருந்தாள். அந்தக் கடிதம்தான், அதே கடிதத்தின் கடைசி வரிதான் என்னை என் வாழ்விலேயே மிகவும் விசித்திரமான கலவரம் அடையும்படி செய்தது. அவள் எழுதியிருந்தாள்:

சகோதரர் ஸ்ரீ நாராயணனுக்கு,

நமஸ்காரம். ஆச்சரியப்பட வேண்டாம். தங்களிடம் உள்ளத்தைப் பறிகொடுத்திருந்த அதே ஜயம்தான் எழுதுகிறேன்.

தங்கள் பெற்றோர்களும் என் பெற்றோர்களும் சேர்ந்து நம்மிருவருக்கும் மணம் முடித்து விடத் தீர்மானித்து விட்டதாக இப்பொழுதுதான் அறிந்து மனங் குன்றிப் போனேன். இச்செய்தி தங்களுக்கு ஒரு வேளை மகிழ்ச்சியை உண்டு பண்ணலாம்.

இந்த செய்தி ஒரு மாதத்துக்கு முன் என் காதில் விழுந்திருந்தால் நானும் சொர்க்க போகமே கிடைத்து விட்டதாகத்தான் எண்ணுவேன். ஆனால் இப்பொழுது என் மனம் ஏனோ உங்களை வெறுத்து விட்டது!

அப்பா என் சம்மதத்தைக் கேட்பது அநாவசியம் என்று எண்ணி விட்டார் போலும்! ஆனால் அம்மா கேட்டாள். நான் சொன்ன பதில் அவளுக்கு ஆச்சரியத்தோடு பலத்த அதிர்ச்சியையும் அளித்தது. 'சம்மதமில்லை' என்று தெரிவித்து விட்டேன். இந்த மறுப்பு உங்களைப் பாதிக்காது என்று நினைக்கிறேன். இவ்வுலகில்தான் என்னைப் போல் அபலைகள் ஆயிரமாயிரம் பேர் இருக்கிறார்களே......

கடைசியாக, காரணத்தைச் சொன்னால் நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள். உங்களை மணக்க நான் ஏன் விரும்பவில்லை, தெரியுமா! ஏனென்றால், அதற்குக் காரணம் உங்கள் முகம் அழகாயிருக்கிறது.......ஆம்! உங்கள் முகம் அழகாயிருப்பதுதான் காரணம்! —ஜயம்.

# கடமையைச் செய்வார்களா?

இலங்கையிலே இரண்டு வகையான இந்தியர்கள் வசிக்கின்றனர். ஒரு சாரார், தங்கள் சொந்த இனத்துக்கு விரோதமாக அரசாங்கத்துக்கு வக்காலத்து வாங்குபவர்கள்; இன்னொரு சாரார், அரசாங்கத்தின் போக்கை எதிர்த்து அதன் விரோதத்தைச் சம்பாதித்துக் கொண்ட காந்திய காங்கிரஸ் வாதிகள்.

அன்று இங்குள்ள இந்தியர் அத்தனை பேரையும் இந்தியாவுக்கு விரட்டி விட்டு, தாங்களாகவே நாட்டைக் கட்டியாள வேண்டுமென்ற பேராவல், ஆட்சி பீடத்தை இன்று ஸ்வீகரித்துக் கொண்டிருக்கும் ஒரு சாராருக்கு இருந்தது. குறுகிய நோக்கத்தாலும், துவேஷ மனப்பான்மையாலும் உந்தப்பட்ட இவர்களது சுயநலம் அன்று விசுவ ரூபமெடுத்து, இந்தியர்களுக்கு எண்ணற்ற தொல்லைகளை வருவித்தது. இந்தச் சந்தர்ப்பத்தில்தான் 'இலங்கை இந்திய காங்கிரஸ்' ஸ்தாபனம் இலங்கையிலே அங்குரார்ப்பணம் செய்யப் பட்டது. காங்கிரஸ் அங்குரார்ப்பணத்தின் பின்னர் தூங்கிக் கிடந்த இலங்கை இந்தியர்கள் வீறு கொண்டு எழுந்தனர். இந்தியரின் ஐக்கியம் அரசாங்கத்தைத் திகைக்கச் செய்தது. அவர்களின் கட்டுப்பாடு காங்கிரஸ் கௌரவத்தை உயர்த்தியது. அரசாங்கத்தின் நோக்கம் தவிடு பொடியாக்கப் பட்டது. இந்தப் பெருமை காங்கிரசில் அங்கம் வகிக்கும் ஒவ்வொரு இந்தியனையும் சாரும். அன்று அரசாங்கத்தின் நோக்கத்தையும் போக்கையும் முழுக்க முழுக்க ஆதரித்த ஒரு சாரார் இன்று காங்கிரசின் சாதனையில் குறை காண முயலுகின்றனர். இவர்கள் ஒன்றை மறந்து விடுகின்றார்கள். அதாவது காங்கிரஸே இவர்கள் வெளியே தள்ளப் படுவதற்கும் முட்டுக் கட்டையா யிருக்கிறதென்பதை. இவர்கள் போக்கு விபரீதமானது. இவர்கள் தங்களுக்குத் தாங்களே துரோகம் செய்து கொள்ளுகிறார்களே யன்றி வேறல்ல. இந்தியத் தொழிலாளரின் இன்றியமையாத சக்தியே காங்கிரஸை இன்று நிலைக்கச் செய்கிறது. நாட்டை உருவாக்கிய இந்தியத் தொழிலாளரின் நிலைமை இன்று உயர்வடைந்திருப்பதற்குக் காரணம் காங்கிரஸ் ஸ்தாபனமே. தொழிலாளர் சம்பந்தப்பட்ட பல போராட்டங்களையும் காங்கிரஸ் நடத்தி வெற்றியும் கண்டிருக்கிறது. தோட்டப் பிராந்தியங்களிலே வாழும் இந்தியத் தொழிலாளர் காங்கிரசின்பால் கொண்டுள்ள பக்தி ஆச்சரியகரமானது. இவர்கள் கட்டுப்பாட்டின் தத்துவத்தை நன்கு உணர்ந்திருக்கிறார்கள். இவர்களின் வாழ்க்கையிலே புரட்சிகரமான மாறுதல் ஏற்பட்டிருக்கின்றது. காங்கிரசுக்காக எந்தச் சந்தர்ப்பத்திலும் எதையும் செய்ய இவர்கள் தயாராயிருக்கிறார்கள்.

நம்மை எதிர்க்கும் ஒரு சக்தியை நாம் எதிர்த்துப் போராட வேண்டுமாயின் நமக்கும் அதற்கான சக்தி வேண்டுமல்லவா! இந்தச் சக்தி நமக்கு எங்கிருந்து எப்படி வரும்! எல்லோரும் ஒன்று பட்டாலன்றி சங்கத்தால் என்னதான் சாதிக்க முடியும்! அப்படியாயின் காங்கிரஸின் அழைப்பை சிரமேற்கொண்டு, கட்டுப்பாட்டுக்கு

வெளியே நின்று 'காங்கிரஸ் சாதிக்கவில்லையே' என்று ஒப்பாரி வைத்து ஓலமிடுவது நகைப்புக் கிடமான தல்லவா !

காங்கிரஸ் எதிர்ப்பின் காரணமாக, அரசாங் கத்தின் நோக்கம் பலிதமடையாது போகவே இன்னொரு விதமான சூழ்ச்சியை அது கையாண் டது. அரசாங்கத்தின் சூழ்ச்சியின் உருவே இந்த பிரஜாவுரிமைச் சட்டம். சட்டத்தின் தன்மையை உணர்ந்த காங்கிரஸ் அதைத் தீவிர மாக எதிர்த்தது. உலகில் எந்த நாட்டிலுமே காணாத அற்புதமான இச்சட்டம் உலக ஜன நாயக நாடுகளையே திகைக்கச் செய்துவிட்டது. படித்தவர்களுக்கே பயங்கரத்தை வருவிக்க வல்ல கேள்விகளுக்குப் பாமர ஏழை மக்கள் எப்படி பதிலிறுப்பர் ! ஆகவே, அரசாங்கத்தின் நீதியற்ற இப்போக்கைக் காங்கிரஸ் வன்மை யாகக் கண்டித்து, உடனடியாகச் சட்டத்தைத் தளர்த்தும்படி வேண்டிற்று. அரசாங்கம் அசைந்து கொடுக்காது போகவே, அக்கிரமத் தின் பேரில் நமக்குள்ள வெறுப்பைக் காண் பிக்க அதைப் பகிஷ்கரிப்பதெனத் தீர்மானித் தது. காங்கிரஸ் தனது பகிஷ்காரத் தீர்மா னத்தை நடைமுறைக்குக் கொண்டு வந்த பின்னரும், காங்கிரஸின் கட்டுப்பாட்டுக் குள் அடங்காத பல பணக்கார இந்தியர்கள் தம்மைப் பதிந்து கொண்டனர். நேரு—சேனநாயக சர்க்காரின் கடிதப் போக்குவரத்து களிலேயே இலங்கை அரசாங்கத்தின் பிடிவாத குணத்தையும், நியாய வரம்பை மீறிய சட்டத் தன்மையையும் நேரு சர்க்கார் உணர்ந்து விட்டது. நேர்மை தவறு சர்க்காரே இலங்கை சர்க்கார் உருவாக்கிய சட்டம் நியாய வரம்பை மீறியதென்ற முடிவுக்கு வருகையில், விஷயம் சரியாகப் புரியாத, குறுகிய நோக்கம் படைத்த ஒரு சிலர் மாத்திரம், காங்கிரஸ் ஏன் அரசாங்கத்தின் போக்கை அன்று ஆதரிக் காமல் பகிஷ்காரம் செய்தது என்று கேட்பது விநோதமல்லவா !

சட்டத்தின் பேரில் நமக்குள்ள வெறுப் பைக் காண்பிக்க ஆரம்பிக்கப்பட்ட பகிஷ்கா ரத்தைத் தொடர்ந்து நடத்துவது நாட்டின் அமைதிக்குப் பங்கம் விளைவிக்கவல்ல மார்க்கத் தையும் சிருஷ்டித்துவிடலாமென்று காங்கிரஸ் உணர்ந்ததால் பகிஷ்காரத்தை வாபஸ் பெறத் தீர்மானித்தது. பகிஷ்காரம் வாபஸ் பெறப் பட்டதால் சட்டத்தை நாம் ஆதரித்ததாக மாட்டாது. காங்கிரஸ் இன்னும் சட்டத்தை எதிர்க்கத்தான் செய்கிறது. ஜனப்பிரதிநிதிகள் சபையிலும், வெளியிலும் காங்கிரஸ் சட்டத்தை எதிர்த்தே வருகிறது. அரசாங்கத் தின் போக்கை அம்பலப்படுத்தி, நியாயமான முறையில் நமது கோரிக்கையைப் பெற காங்கிரஸ் அல்லும் பகலும் அயராது உழைக் கிறது. இந்த உண்மையை உணராதோர் வீணிலே கனைகளைவிடுகின்றனர்.

12-8-51 கல்கி இதழின், வட்டமேஜையில், காங்கிரஸின் மீது குறை கூறியிருந்த திருமதி கமலாவிடமும் அனுதாபமே படுகிறோம். தமக்குத் தெரிந்தவற்றையே இவரும் வெளி யிட்டிருக்கிறார். ஆனால், எழுதும் ஆற்றலுண் டென்ற காரணத்தால், தமக்கே தெரியாத விஷயங்களில் தலையிட்டு அலசி ஆராய்ந்து



வந்தவர் !—இந்தக் கடிகாரத்தை நான் ஒன்றும் செய்யவில்லை. கீழே போட்டு விட்டேன். அதுதான் தவறு !

கடிகார ரிப்பேர் செய்பவர் :—இல்லை, இல்லை. கீழே போட்ட தைத் திருப்பி எடுத்துக் கொண் டீரே, அதுதான் தப்பு !

விஷயத்தை விளங்கிக் கொள்ள முயலாது, முடிவு கட்ட முனைவதே நமக்கு வருத்தத்தை யளிக்கிறது. இவரைப் போலவே பலரும் நடந்து கொள்ளுகின்றனர். எனினும் மேற் காட்டிய விவரங்களைப் படித்த பின்னராவது தங்களது தவறான அபிப்பிராயங்களை அவர்கள் நீக்கிக் கொள்ளுவார்களென நம்புகிறேன்.

அரசாங்கத்தின் போக்கு நேர்மையற்ற தென்பதை நீதிமன்றம் மூலமாகவே காங் கிரஸ் நிரூபித்து விட்டது. காங்கிரஸ், தனிப்பட்ட ஒருவரின் நலனுக்காக அன்றி சகல இந்தியரின் நலனுக்காகவே இத் தகைய நடவடிக்கையி லிறங்கி யிருக்கிறது. திருமதி கமலா குறிப்பிடும் சம்பவத்தைப் போன்றல்லாது கேகாலைக் கோர்ட்டிலே, சின்னாட்களுக்கு முன்னே நடைபெற்ற வழக் கில் அரசாங்கத்தின் சட்டம் சட்ட வரம்பையே மீறியதென்று நீதிபதியவர்களே தீர்ப்பளித் திருக்கிறார். இந்த விதமான நிலைமையைச் சிருஷ்டிக்க முன்வந்தது காங்கிரஸ் தானே ! நீதிபதியவர்களின் தீர்ப்பை ஆட்சேபித்து அரசாங்கம் சுப்ரீம் கோர்ட்டுக்கு அப்பீல் செய் திருக்கிறது. நீதியின் அடிப்படையில் இங்கே யும் நமக்குச் சாதகமான தீர்ப்பளிக்கப்படு மென நம்புகிறோம். அல்லாது போனால் பிரிவுக் கவுன்சில் வரையிலும் இவ்வழக்கைக் கொண்டு செல்ல காங்கிரஸ் தீர்மானித்துள்ளது. இன் னும் பலவிடங்களிலும் இது சம்பந்தமான பல வழக்குகள் காங்கிரஸால் தொடரப்பட் டிருக்கின்றன. இவைகள் சுப்ரீம் கோர்ட்டு வழக்கின் முடிவு தெரியும் வரைக்கும் ஒத்தி வைக்கப்பட்டிருக்கின்றன.

எனவே, உண்மையை உணராது குறை கூறுபவர்கள், முதன் முதல், தாங்கள் தங்கள் கடமையைச் செய்கிறோமா வென்பதை உணர்ந்து பார்த்தலே அறிவுடைமையாகும். தவறு இழைப்பது சகஜம் என்பதை ஒப்புக் கொண்ட திருமதி கமலா, தனது தவறை முதலில் உணர முன்வருவாரா !

கொழும்பு
23—8—51

ஜே. வி. செபாஸ்டியன்



# அழகிற்கான அரிய சாதனம் 'ஓடின்'

*Every year greater numbers of discriminating ladies turn to the regular use of OATINE beauty creams.*

***"Cream at night, snow by day, gives loveliness the Oatine way."***




Make sure seal is unbroken



## பரிவம் அந்தப் பெண்
## மலேரியாவினால் என்ன
## கஷ்டப்படுகிறாள்

### 'பாலுட்ரின்'
### அந்தத் தொல்லையினின்றும்
### என்னைப் பாதுகாத்துவருகிறது



எலும்பையே நொறுக்குவது போன்ற தினசரி குடும்ப வேலைகளுக்கு மேல் மலேரியா வேறு. பாவம் அந்தப் பெண் மெலிந்து வெறும் நிழல்போல ஆகிவிட்டாள். அந்த ஏதுப்பெண் அதைப்பற்றி என்னதான் செய்கிறாளோ கடவுளுக்குத்தான் தெரியும். எப்போது பார்த்தாலும் அவள் நோய், நோய், நோய் என்று நோயினால் நொறுங்குகிறதைத்தான் நாங்கள் காண்கிறோம். ஆனால் தினமும் ஒரு 'பாலுட்ரின்' மாத்திரை வீதம் சாப்பிட்டு வந்தால் மூன்று அல்லது நான்கு நாட்களுக்குள் அவள் சுலபமாக குணமடையலாம். அவளது உதாரணம் என்னை உஷார்ப்படுத்திவிட்டது. ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையும் சாப்பாட்டுக்குப் பிறகு ஒரு 'பாலுட்ரின்' மாத்திரை சாப்பிடுவதை நான் வழக்கமாக ஆக்கிக் கொண்டுவிட்டேன். என் குடும்பத்திலே மற்றவர்களும் இதைப் பின்பற்றுமாறு செய்து வருகிறேன். ஆகையினால் மலேரியா எனது வாசற்படிகளை அணுகுவது இல்லை.

ICI

## பாலுட்ரின்*
டிரேட் மார்க்

மலேரியாவுக்கு ஓர் அற்புதமான மருந்து

இம்பீரியல் கெமிகல் இண்டஸ்ட்ரீஸ் ( இந்தியா ) லிமிடெட்

IX-P 139 TM



சுசீலா கிப்ஸ் உபயோகிக்கிறாள்
அவள் அழகான பற்களைப் பெறுவாள்
1
சுசீலா தனது கிப்ஸ் டென்டிபிரிஸின் அழகான டப்பியையும், இனிய புதிய மணத்தையும் விரும்புகிறாள்.
2
அவள் பிரஷை தண்ணீரில் நனைத்து கிப்ஸ் டென்டிபிரிஸ் கட்டியில் தேய்க்கிறாள்.
3
அவள் எல்லா பற்களையும் தேய்க்கிறாள். (மேலும் கீழுமாக) உள்ளும் வெளியும் சுத்தம் செய்கிறாள்.
4
பிறகு தண்ணீரால் வாயை கொப்புளிக்கிறாள். இப்பொழுது கிப்ஸ் உபயோகிப்பதால் அது அழகான பற்களைப் பெற உதவும்.
உங்கள் குழந்தைகளும் கிப்ஸ் உபயோகிக்கிறார்களா?
கரகரப்பான சுத்தம் செய்யும் வஸ்துக்கள், சாம்பல், கரி இவை போன்றவை, குழந்தைகளின் பற்களுக்கு ஊறுவிளைவிக்கலாம். உங்கள் குழந்தைகளை சிறுவயதிலிருந்தே கிப்ஸ் டென்டிபிரிஸ் உபயோகிக்கச்செய்யுங்கள். அவர்கள் பெரியவர்களானதும் வெண்மையான குற்றமற்ற பற்களைப்பெறுவார்கள். நுரைபோல் மிருதுவான கிப்ஸ் பற்களுக்கோ ஈறுகளுக்கோ ஒருபொழுதும் கெடுதல்செய்வதில்லை. குழந்தைகளும் பெரியவர்களைப் போலவே, கிப்ஸை விரும்புகிறார்கள். அதற்கு காரணம் கிப்ஸின் இனிய புதிய வாசனையும், தேர்ந்தெடுக்க 3 கவர்ச்சிகரமான வர்ணங்களிலுள்ள டப்பிகள் இருப்பதினாலும்தான்.
கிப்ஸ் டென்டிபிரிஸ்
ஒழுங்கான முறையில் பற்களை வெண்மையாக சுத்தம் செய்கிறது
Gibbs
DENTIFRICE
GD. 24-172 TM

## உங்கள் ஒல்லியான தோற்றத்தை இழந்து வருகிறீர்களா?

**ஆரோக்யத்திற்கும் கவர்ச்சிக்கும் மருந்து போர்ட் அங்கீகரித்துள்ள மார்க்கம்**

ஒல்லியும் சொகுசும் வாய்ந்த உடல் தோற்றத்தின் வசீகர சக்தியைப்பற்றி ஒவ்வொரு பெண்மணியும் அறிவாள். ஆனால் அந்தத் தோற்றத்தைப்பெற உங்கள் ஆரோக்யத்தைக் கெடுக்கும்படியான அபாய மார்க்கத்தைக் கையாள வேண்டாம். மருந்து போர்ட் அங்கீகரித்துள்ள பைல் பீன்ஸை உட்கொண்டு ஒல்லியான தோற்றம், வாலிபத்தின் கவர்ச்சி, புத்துணர்வும் பெறுங்கள்.

பைல் பீன்ஸ் உங்கள் உடலமைப்பை ஒழுங்குபடுத்தி இயக்குகிறது. உடல அசுத்தங்களை போக்குகிறது. பைல் பீன்ஸ் உங்கள் ரத்தத்தைச் சுத்தம் செய்கிறது. பைல் பீன்ஸ் சருமச் சரிப்படுத்தி ஊக்கமளிக்கிறது. இப்படியெல்லாம் செய்வதால் பைல் பீன்ஸ் வேண்டாத சதையையும் உடல் கனத்தையும் அவற்றின் முகாந்திரத்தையும் போக்குகிறது. உங்களுக்கு ஆனந்தமும் குதூகலமும் தரக்கூடிய உடல் ஆரோக்யத்தை அது அளிக்கிறது.

மலச்சிக்கல், வயிற்றுவலி, அஜீர்ணம், பித்தம், மற்றும் பல நோய்களுக்கும் பைல் பீன்ஸ் உலகப் பிரசித்தி பெற்ற மருந்தாக விளங்குகிறது. ஒழுங்காக பைல் பீன்ஸ் உட்கொள்ளுங்கள். எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.




FBY: 9



# தொண்டை புண்ணா?

கொப்புளிப்பதற்கு

# அஸ்ப்ரோ

## சுதந்திர தின விற்பனை!

விசேஷ கவனத்துடன் தயார் செய்யப்பட்டவை ஒவ்வொன்றும் 5 வருட உத்தரவாதம்

No. 1



Size 6½"

5 ஜுவல் க்ரோம் 32/- ரோல்டுகோல்டு 35/-
7 ,, க்ரோம் 37/- ரோல்டுகோல்டு 40/-
15 ,, க்ரோம் 46/- ரோல்டுகோல்டு 48/-

No 2



Size 7½"

5 ஜுவல் க்ரோம் 31/- ரோல்டுகோல்டு 35/-
7 ,, க்ரோம் 33/- ரோல்டுகோல்டு 37/-
15 ,, க்ரோம் 45/- ரோல்டுகோல்டு 47/-

No 3



Size 11"

5 ஜுவல் க்ரோம் 22/- உயர்ரகம் 24/-
ரேடியத்துடன் 24/- சென்.செகண்டு 25/-
வாட்டர் புரூப் 15 ஜுவல் 60/-

No.



Size 8½"

5 ஜுவல் க்ரோம் 32/- ரோல்டுகோல்டு 34/-
7 ,, க்ரோம் 34/- ரோல்டுகோல்டு 36/-
15 ,, க்ரோம் 48/- ரோல்டுகோல்டு 56/-

No 5



Size 6½"

5 ஜுவல் க்ரோம் 24/- உயர்ரகம் 27/-
5 ,, ரோல்டுகோல்டு 30/- உயர்ரகம் 32/-
15 ,, க்ரோம் 45/- உயர்ரகம் 48/-
இங். டைம்பீஸ் 24/- உயர்ரகம் இங். 25/-
பாக்கெட் வாட்ச் 12/- உயர்ரகம் 15/-

பாக்கிங், போஸ்டேஜ், விற்பனை வரி இலவசம்

**CARONA WATCH CO.**
Post Box No. 6729, Calcutta—7



ஜாம் - பக்
இதமாகவே
குணப்படுத்தும்
நோய் நிவாரணி

எவ்வளவு விரைவில் ஜாம்பக்

**Zam-Buk**

வெட்டுக் காயங்கள்,
காயங்கள்,
மண்டைச் சொறி,
நெருப்புக் காயங்கள்
ஆகியவற்றை
குணப்படுத்துகிறது என்று பாருங்கள்!

ஜாம்-பக் மூலிகை ஆயின்ட்மென்ட் விரைவாகவும், நிச்சயமாகவும் வேலை செய்கிறது: எப்படியெனில் அதன் ஔஷதச் செறிப்புவாய்ந்த நோய் நிவாரணத் தைலங்கள் நோயுற்ற பாகங்களில் ஊடுருவிச் சென்று குணப்படுத்துகின்றன. ஜாம்-பக் வலியையும் புண்ணையும் குணமாக்குகிறது. ஆபத்து தரும் கிருமிகளை ஜாம்-பக் நாசம் செய்கிறது. அழுக்குக் கழிவுகளை உலர்ந்து போகவும் செய்கிறது. ஜாம்-பக் சருமத்தைப் பாதுகாத்து விரைவாகக் குணப்படுத்துகிறது. மீண்டும் ஆரோக்கியமாக இருக்கச் செய்கிறது. வெட்டுக் காயங்கள், காயங்கள், புண்கள், ரணங்கள் ஆணி, நமைச்சல், மற்றும் பல சரும நோய்கள், பூச்சிக்கடி ஆகியவற்றிற்கு ஜாம்-பக் உலகத்திலேயே சிறந்த நிவாரணியாகும். காலில் ஏற்படும் நோய்களுக்கும், மூலத்திற்கும் ஜாம்-பக் அற்புதமான நிவாரணியாகும்.




ஜாம்-பக் உலகத்தின் சிறந்த சரும ஆயின்ட்மென்ட்
மிருகக் கொழுப்புக் கலப்பற்றது என்பது உத்தரவாதம்

ஏஜண்டுகள்: மெஸர்ஸ். தாதா & கோ., பி. டி. மதராஸ்

FZY 4



"வாங்க மிகச் சிறந்தவை Platignum"

MADE IN ENGLAND

பிளாட்டினம்

பேனாக்கள் பால்பாயிண்டுகள்

LAS (8)




தற்கால நிலைமைகளினால் நமது பலம், சக்தியும் அதிகமாக விரயமாகிறது. இதை ஈடு செய்வது ஆழ்ந்த சுக நித்திரைதான். இரவில் நல்ல தூக்கமில்லையேல் மறுநாள் வேலைக்குச் சக்தியே இருக்காது. தினசரி படுக்கைக்குப் போகுமுன் ஓவல்டின் சாப்பிடுங்கள் அது நல்ல அயர்ந்த நித்திரை தர உதவுகிறது. மேலும் உங்கள் தூக்கத்திலேயே அடுத்த நாளுக்கு வேண்டிய உடல், நரம்புகளுக்குப் பலம் தரக்கூடிய போஷணை அளிக்கிறது. ஓவல்டினில் சுத்தமான பசுவின் ஏட்டுப் பால், பழுத்த பார்லி மால்ட், கொக்கோ. சக்தி தரும் இயற்கையான உணவுகளும், பாஸ்படைட்கள் பி & டி விடமின்களும் இருக்கின்றன. ஓவல்டினில் இருக்கும் போஷாக்கு மற்றும் விடமின் சத்துக்கள் இன்றியமையாதவை. ஓவல்டினை விடச் சிறந்தது வேறு கிடையாது.

டாக்டர்கள் எங்கும் அதைச் சிபாரிசு செய்கிறார்கள். போலிகளைத் தள்ளி விடுங்கள்.

விநியோகஸ்தர்கள் : கெறாம்ஸ் டிரேடிங் கம்பெனி (இந்தியா) லிட்.




OV.328

ஷாலிமார் தயாரிப்புகளை ஆர்டர் செய்யும்போது எந்த வேலைக்காக என்பதை தெரிவிக்கவும்.

எண்ணெய் சேர்ந்த
**டிஸ்டெம்பர்**
தண்ணீரால்
அழிக்கமுடியாதது



ட்யூரடால் 48 அழகிய வர்ண வரிசைகளில் கிடைக்கும். உட்புற வெளிப்புற சுவர்களுக்குப் பூச இதைவிடச் சிறந்த கழுவி விடக்கூடிய எண்ணெய் சேர்ந்த டிஸ்டெம்பர் கிடையாது. ட்யூரடால் அழியாது. தண்ணீராலும் அழிக்க முடியாது.

**அடித்தாற் போல் சொல்லுங்கள்**

# ஷாலிமார் ட்யூரடால்

எண்ணெய் சேர்ந்த கழுவி விடக்கூடிய டிஸ்டெம்பர்

**SHALIMAR PAINT, COLOUR & VARNISH CO., LTD.,**
Post Box 136, Madras 1. Importers & Distributors for Ceylon :
Lewis Brown & Co., Ltd., Post Box 85, Colombo

ஏழு வருஷங்கள்
அவஸ்தையின் பிறகு......

# கீல் வாயுவின்

## அடையாளமே தற்போது இல்லை





"க்ருஷன்" உபயோகிப்பதன் முன்னர், இம்மனிதன் பலவித உபாதைகளால் நிரந்தரமாகப் பீடிக்கப்பட்டிருந்தபோதிலும், அவ்வலிகள் எல்லாம் இப்பொழுது மறைந்துவிட்டன. அவரது அனுபவத்தை விளக்கும் கீழ்க்காணும் லெட்டர், மற்றும் வலிகளினால் அவஸ்தைப் படுபவர்களால் கவனிக்கத் தந்தது:—

"ஆறு மாதங்கள் தொடர்ச்சியாக நான் "க்ருஷன்" சாப்பிட்டு அதன் பலனாக அடைந்த பயன்களையும், "க்ருஷனி"ன் உயர்ந்த தன்மையை மனமாறப் புகழ விரும்புகிறேன். சென்ற ஏழு வருஷங்களாக அடிக்கடி கீல்வாயு, முதுகு வலி, மலச்சிக்கல், மயக்கம் இவற்றால் கஷ்டப்பட்டபோதிலும் தற்போது, நான் இருபது வருஷத்திற்கு முன்பிருந்த நல்ல நிலையில் இருக்கிறேன். எனக்கு இப்போது 45 வயது: எனினும் இவ்வளவு ஆரோக்யத்துடன் முன்பு எப்பொழுதும் இருந்ததில்லை." — A. P.

கீல் வாதத்திற்கு முதற்படியான சிகிச்சை, குடல்களை நன்கு இயங்குமாறும், மூத்திரக் காய்களைச் சுத்தமாகவும் வைத்திருப்பதுதான். "க்ருஷன்" இவ்வேலையைச் சுலபமாகவும், யாதொரு அபாயமின்றியும் செய்கிறது. ஏனெனில் "க்ருஷன்" மலமிளக்கியாகவும், மூத்திரம் நன்கு வெளியேறச் செய்வதுமாக ஆன, இருவித வேலைகளை நன்கு செய்கிறது. ஹானியைத் தரும் புளிப்பு சத்தும் விஷப் பொருள்களும் செவ்வனக் கழுவப்பெற்று மூத்திரக் காய்களின் வழியாக வெளியேற்றப் படுகின்றன. குடல்கள் இயற்கையாகவும் நிதானமாகவும் இயங்குமாறு தூண்டப்படுகின்றன. கீல்வாத சம்பந்தமான வலிகள் அடியோடு மறைந்து போவதும் புத்துயிர் பெற்ற சக்தியும், இளமையும் அதனின்று அடையும் கண்கண்ட பலன்கள். எல்லா வியாபாரிகளிடமும் கெமிஸ்டுகளிடமும் கிடைக்கும்.




KBID. 15

# உங்கள் நரம்புகள்!

வலுவுள்ளதாக உறுதியுடன் இருக்க வேண்டும் — அதுவும் ஓய்வில்லாத உழைப்பும் ஒழியாத கவலையும் நிறைந்த தற்கால வாழ்க்கையில்

# அஸ்வான்

நீண்ட காலமாய் மனோ பலமும் தேக திடனும் வியர்த்தமாகி யிருந்தாலும் ஈடு கொடுத்து போஷாக்கு அளிக்கக் கூடிய ஒரு உயர்ந்த டானிக்

**இன்றே ஒரு பாட்டில் வாங்குங்கள். எப்போதும் கையிருப்பாய் வைத்திருங்கள்**



சிறியோர்

•

முதியோர்

•

நோயாளிகள்

யாவருக்கும் உகந்தது

## பெங்கால் கெமிகல்

**கல்கத்தா : பம்பாய் : கான்பூர்**

ஏஜண்டுகள் :

என். தேசாய் கௌண்டர் & கோ.

41, பந்தர் தெரு - சென்னை





# 'கோலினாஸ்'

## புன்னகையில் குணமேன்மை ஒளிர்கிறது!

நுரை தான் இந்த வித்தியாசத்திற்குக் காரணம்!

அதிக சிக்கனமான தங்கூட —ஏனெனில் அரையங்குல அளவே போதுமானது!



ஈரமில்லாத பிரஷில் உபயோகிப்பதே உத்தமம்

இந்தியாவில் தயாரிப்பாளர்கள்:
ஜியாபரே மானர்ஸ் & கோ. லிட்., பம்பாய் ]
கிளைகள்: கல்கத்தா-மதராஸ்-டில்லி.

GK-1316



1 2 3 4 5 6
Doric
டோரிக்
சிறந்த பிரயோஜனமுள்ள பேனாக்கள்
ரெகுலர் ரூ. 6/-
லீவர்-பில்லர் ரூ. 6/8/-
எல்லா டீலர்களிடமும் கிடைக்கும்
டோரிக் ப்ராடக்ட்ஸ்
பம்பாய் மியூச்சுவல் பில்டிங், ஹார்ன்பி ரோடு, பம்பாய்.
கல்கத்தா: 10, சௌரிங்கி. பெங்களூர்: 2, சவுத் பரேட்.
NAS. 705




# அந்த யௌவனமான சரும சுகத்தை நீங்களும் நிரந்தரமாகப் பெறலாம்!

புதிய பரிமளத்துடன் கூடிய **காந்தி**, ஸ்நானத்தை இன்பமயமாக்கி சருமத்தை குளுமையாக வைத்து புத்துணர்வளிக்கிறது. **காந்தீ** வெறும் ஒரு ஸ்நான சோப் மட்டுமல்ல. நீங்கள் மிகவும் விரும்பும் மிருதுவான, ஆரோக்கிய மயமான யௌவன எழிலையும் மீண்டும் அளிக்கும் சோப்.

## காந்தி
### டாய்லட் சோப்

ஸ்வஸ்திக்கின் தொடர்ந்து வேலை செய்யும் சோப் இயந்திரத்தில் தயாரிக்கப்படுகிறது. இவ்வகை இயந்திரம் ஆசியாவிலேயே இது ஒன்றுதான்.







ஸ்வஸ்திக்கின் பலவகை தயாரிப்புகளில் இவைகளும் உள்ளன:
மாயா அழகு சோப்
777 சலவை சோப்
ஸ்வஸ்திக் வாசனை ஆமணக் கெண்ணெய்
கோவலின் பிராண்டு வனஸ்பதி

## ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிமிடெட், பம்பாய்

விற்பனை டெப்போக்கள்:

பெங்களூர் ஸிடி
ஆர்காடு ஸ்ரீநிவாஸாசார் ரோடு
கொச்சி
கல்வத்தி ரோடு

மதராஸ்
14, கிடங்கித் தெரு, பிராட்வே
விசாகப்பட்டணம்
20-125, நாய்கள் தெரு

தவணகிரி : மந்திப்பேட்டை
ஹைதராபாத் (Dn.)
B-2. பிளாக் 4, ஆர் ரோடு
உஸ்மானி, கஞ்சான் பஜார்



Edited, Printed and Published by R. Krishnamurthy at "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras.

கவிபரசர் டாகூர் காந்தி மகாத்மாவின்
பெருமையையும் அவர் இந்தியாவுக்கு
ஆற்றி யிருக்கும் அருள்தொண்டையும்

# மகாத்மா காந்தி

என்ற நூலில் அழகாக விளக்கி யிருக்கிறார்

விலை அணா எட்டு

( தபால் செலவு தனி )

•

சசிதேவி எழுதிய

# விஜயா

முதலிய கதைகள்

விலை ரூ. 2-8-0

( தபால் செலவு தனி )

•

கிடைக்குமிடம்

**கல்கி காரியாலயம்**

கீழ்ப்பாக்கம் :: சென்னை



## மூல நோய் சம்ஹார

# தித்திப்பு லேகியம்

மூல நோயே எல்லா நோய்களுக்கும் மூலகாரணம். எவ்வித மூல நோயா யினும் அவற்றை அறவே ஒழிக்கும் சக்தி மேற்கூறிய எமது தித்திப்பு லேகியத்திற்கு உண்டு. ராத்தல் ஒன்றுக்கு விலை ரூபாய் ஆறு மட்டும். வியாதி இரத்த மூலமா யிருப்பின் விவரம் தெரிவிக்கவும்.

N. B:—தீராத நோய் என்று தள்ளி யிருக்கும் அநேகம் நோய்களும் "அகஸ்தியர்" மருத்துவத்தின் பெருமையால் தீருமென அறியவும். எந்த நோயாயினும் எத்தகைய பழக்க முடையதாயினும் தீர்க்கலாம். விவரங்களுக்கு விரிவாக எழுதவும்.

தபால் செலவு பிரத்தியேகம்

ஏஜண்டுகளும் தேவை

THE AGASTYA MANDIRAM
SIDDHA VYDYASALA
SAMADHI THOPPU, MANAKKAD
TRIVANDRUM






ரோஷ்
தயாரிப்பு

Regd. No. M. 4392



# முட்டையும் அநேகமாக பாலுக்குச்சமமானதுதான்

முட்டைகளும் பாலைப்போலவே மிகவும் சிறந்த உணவு. அவைகளில் கால்ஷியம் (பற்களுக்கும் எலும்புகளுக்கும்), விடமின்கள் ஏ, பி, டி, (பொதுவாக உடல் நலத்திற்கு) இவைகள் அடங்கியிருக்கின்றன. நமது சமநிலை உணவில் முட்டைகளைச் சேர்த்துக்கொண்டால் மிகவும் பயனளிக்கும். ஒரு சமநிலை உணவு, எழுநாட்களில் சராசரியாக எல்லா ஐந்துவகை உணவு சத்துக்களும் அவசியம் அடங்கியதாக இருக்க வேண்டும். அதனால் உணவு உட்கொள்ளும் ஒவ்வொரு சமயத்திலும் கீழே தரப்பட்டுள்ள ஒவ்வொரு வகையிலிருந்தும் ஒன்றோ அல்லது மேற்பட்டோ பொருள்களைச் சேர்த்துக்கொள்ளவேண்டும். (1) *விடமின்கள்:* பழங்கள், சமைக்காத காய்கறிகள், சாலட்; (2) *தாதுப்பொருள்கள்:* பால், முட்டை, பாலாடை, மீன், பசலைக்கீரை; (3) *புரதசத்துக்கள்:* பால், முட்டைகள், கொட்டைகள், மாமிசம், பயறுவகைகள், மீன்; (4) *மாவுசத்துக்கள்:* அரிசி உள்பட எல்லா தானியங்கள், உருளைக்கிழங்கு, வாழைப்பழம்; (5) *கொழுப்புகள்:* கொட்டைகள், தாவர எண்ணெய்கள், கொழுப்புள்ள மாமிசம். சமைப்பதற்கான சிறந்த கொழுப்புகளில் ஒன்று டால்டா. இது எல்லாவித சமையல்களுக்கும் உகந்தது. மேலும் ஊட்டமளிப்பது. சீல் செய்த டின்களில் விற்கப்படுவதால் புதிதாகவும் சுத்தமாகவும் உங்களுக்கு கிடைக்கிறது.




குழந்தைகள் முட்டை சாப்பிடவேண்டுமா?

இலவச ஆலோசனைகளுக்கு இன்றே—அல்லது என்று வேண்டுமானாலும்—எழுதுங்கள்!

## டால்டா அட்வைஸரி ஸர்வீஸ்

தபால் பெட்டி நெ. 353, பம்பாய் 1